ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு."—திருவள்ளுவர்.

| தொகுதி 29 | சுபானுஹு தைமீ கஉ<br>1944ஹு ஜனவரிமீ 14உ | பகுதி 7 |
| --- | --- | --- |

## கடவுள் வணக்கம்.

நினைந்துநைந்து உள்கரைந் துருகி
இமையோர் பலரும் முனிவரும்
புனைந்த கண்ணிநீர் சாந்தம்
புகையோடு ஏந்தி வணங்கினால்
நினைந்த எல்லாப் பொருள்கட்கும்
வித்தாய் முதலில் சிதையாமே
மனஞ்செய் ஞானத்துன் பெருமை
மாசு உணாதோ மாயோனே. (1)

மாயோனி களாய் நடைகற்ற
வானோர் பலரும் முனிவரும்
நீயோனி களைப்படை யென்று
நிறைநான் முகனைப் படைத்தவன்
சேயோன் எல்லா அறிவுக்கும்
திசைகள் எல்லாம் திருவடியால்
தாயோன் எல்லா எவ்வுயிர்க்கும்
தாயோன் தானோர் உருவனே. (2)

தானோர் உருவே தனிவித்தாய்
தன்னில் மூவர் முதலாய
வானோர் பலரும் முனிவரும்
மற்றும் மற்றும் முற்றுமாய்
தானோர் பெருநீர் தன்னுள்ளே
தோற்றி யதனுள் கண்வளரும்
வானோர் பெருமான் மாமாயன்
வைகுந்தன் எம்பெரு மானே. (௩)




# அமைதி நிலவ உதவுவது கலையே!

"உலகத்தில் இப்பொழுதும் யுத்தம் முழங்குகிறது. கொலைகள் நடக்கின்றன; யுத்தம் ஒழிய வேண்டும். அமைதி நிலவ வேண்டும் என்றுதான் யாவரும் விரும்புகிறார்கள். யுத்தம் முடிந்ததும், மீண்டும் இம்மாதிரி யுத்தம் தலையெடுக்காதபடி ஒரு புது உலகத்தைச் சிருஷ்டிக்க வேண்டுமென்று நிபுணர்கள் திட்டம் போட்டுக்கொண்டிருக்கிறார்கள். ரூஸ்வெல்டும் சர்ச்சிலும் கலந்து பேசுகிறார்கள். பழைய அரசியல் உள்ளத்தோடு அவர்கள் பேசி முடிவு செய்தால் அது பயன் தராது? எந்தத் தேசத்தின் நாகரிகம் கலையை அடிப்படையாகக் கொண்டிருக்கிறதோ அந்த நாகரிகம் அழியாது. மதுரையில் மீனாட்சியம்மன் ஆலயத்தில் உள்ள ஒவ்வொரு தூணிலும் உள்ள ஓவியங்கள் நம் நாட்டு நாகரிகத்தை—சமயத்தை—கலையைத் தெற்றென விளக்குகிறது. ஓவியத்தை—கலையை—அழிப்பது அநாகரிகம். மேனாட்டார் சமயம் வேறு, அரசியல் வேறு என்று கண்டார்கள். ஆகையினால் தான், இப்பொழுது அவர்களின் நாகரிகம் குண்டாகவும் பீரங்கியாகவும் மாறி, கலைகளையும் ஓவியங்களையும் மனிதர்களையும் கொலை செய்து வருகிறது. நம்மவர்கள் சாந்தம் சாந்தம் சிவம் என்று சமயத்தைக் கண்டார்கள். இதுதான் நாம் உலகத்துக்கு அனுப்பும் செய்தி" என்று தமிழ்ப் பேரறிஞர் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் சமீபத்தில் நடந்த காரைக்குடி இந்து மதாபிமான சங்கத்தின் வெள்ளிவிழாக் கொண்டாட்டக் கூட்டத்தில் குறிப்பிட்டார். மேலும், அப்பெரியார், "நாம் நம்முடைய சமயத்தை மறந்துவிட்டோம். கலை, ஓவியம், கடல், ஆறு இன்னும் எல்லாம் சாந்தம்—சாந்தம்—சிவம் என்பதில் அடங்கியிருக்கின்றன. இந்த உணர்ச்சியுடன் பாடுபட்டால் தான் உலகத்தில் அமைதி நிலவும். இன்றேல், மீண்டும் மீண்டும் யுத்தம், கொலைகள் தாம். இயற்கையோடு இயைந்து வாழுவதுதான் சமயம். கலைகளை அழிப்பதில் நாம்

வல்லவர்கள். யாழ் என்பதுபோய் வீணை, பிடில், ஆர்மோனியம், புல்புல்தாரா வாக மாறி யிருக்கிறது.—"வண்டுயாழ் செய்யும் குற்றாலமே" என்று சம்பந்தர் பாடி யிருக்கிறார். யாழ் என்றால் என்னவென்றே இப்பொழுது தெரியாது. குழந்தை நாகரிகத்தி லிருந்துதான் இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழும் உண்டாயிற்று. இவைகளை உயிர்ப்பிக்க வேண்டியது நமது கடமை," என்று கூறி முடித்திருக்கிறார்.

இவ்விதம் 'இயற்கையோடு இயைந்த வாழ்வுதான் சமயம்' 'சாந்தமே சிவம்; சிவமே சாந்தம்' என்ற கொள்கையும் நம்பிக்கையும் உடைய தமிழ்ப் பெரியார் திரு. வி. க. உலகில் சாந்தமும் சமாதானமும் நிலவ வேண்டுமென்று விரும்புவது வியப்பல்ல; யுத்த களத்தில் சமீபகாலம் வரை ஊடாடிக் கொண்டிருந்த அதாவது இராணுவத் தலைவரா யிருந்த இந்தியா வைஸ்ராய் லார்டு வேவல் உலகில் சமாதானம் ஏற்பட வேண்டுமென்று விரும்புவதுதான் ஆச்சரியமாகும். சமாதானத்தையும் முன்னேற்றத்தையும் ஏற்படுத்துவதற்கு ஏதுவாகவுள்ள விஞ்ஞான சாஸ்திரம், யுத்த முதலிய நாசவேலைகளுக்குப் பயன்பட்டு வருகிறதே என்று அவர் வருத்தப்படுகிறார். சமீபத்தில் புதிய டில்லியில் நடந்த இந்திய விஞ்ஞானிகள் மகா நாட்டை லார்டு வேவல் திறந்து வைத்துப் பேசுகையில், இவ்விஷயத்தை வெகு தெளிவாக எடுத்துக் கூறினார். "விஞ்ஞான அறிவு என்பது சமாதானமும் முன்னேற்றமுமாகும், ஆனால், ஒரே குழப்பமாயுள்ள இக்காலத்தில் விஞ்ஞானிகளும் நாச வேலையில் பங்கெடுத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது.........விஞ்ஞான கலை விரைந்து அதிவேகமாக முன்னேறி வருகிறது. முற்கால விஞ்ஞான சாஸ்திரிகளைவிட, பிற்கால விஞ்ஞான சாஸ்திரிகள் காலத்தையும் ஆகாசத்தையும் தாக்கத் தொடங்கி விட்டனர். அதனால் ஏற்பட்ட கெடுதல் என்னவென்றால், அவர்கள் கண்டு பிடித்த சில ஆராய்ச்சிகள் தவறானவர்கள் கைவசப்பட்டதேயாகும்...........இப்பொழுது நடப்பதை நடக்க விட்டு விட்டு, விஞ்ஞான சாஸ்திரிகளுடைய உதவியை, அவர்கள் வெளியனுப்பிய பெரும் பூதத்தை அடக்கவும் புதிய உலகில் ஒழுங்கை நிலை நிறுவவும் நாம் பெற்றுக்கொள்ள வேண்டும்." என்று குறிப்பிட்ட லார்டு வேவல், இந்தியா விஞ்ஞான சாஸ்திர வகையில் செய்ய வேண்டிய கடமையையும் பின் வருமாறு எடுத்துக் கூறலானார்.

"விஞ்ஞானத் துறையில் இந்தியா கண்டு பிடித்தது சமாதானத்துக்கும் முற்போக்குக்குமே வழி காண்பதாயுள்ளது. தன் பழைய

கலா ஞானத்துடன் நவீன விஞ்ஞானத்தையும் இணைப்பதால் அது எல்லா வழியிலும் லாபமே பெறும்......யுத்தத்துக்குப் பின் புனரமைப்பு வேலையிலும் அது பெரிதும் சாதிக்க வேண்டும். மனித சமூக நலத்துக்கே அறிவு, அபிவிருத்தித் துறை, உயரிய வழியென்றும் எல்லா நாட்டினிடையும் நல்லுணர்ச்சி யேற்பட சிறந்த சாதனமென்றும் நான் நம்புகிறேன்" என்று கூறினர்.

நமது பழைய நாகரிகம் நிலைக்க வேண்டுமானல் நாகரிகத்துக்கு அடிப்படையான சமாதானமும், சந்துஷ்டியும் ஏற்பட வேண்டுமானல்—நம் நாட்டுக் கலாசாரம் பாதுகாக்கப்பட வேண்டும். இவ்வுண்மையை அகில இந்திய பத்திரிகாசிரியர் மகா நாட்டுத் தலைவரும், 'பம்பாய் கிரானிகல்' பத்திரிகையின் ஆசிரியருமான ஜனுப் எஸ் ஏ. பிரெல்வி நன்கு உணர்ந்திருக்கிறார் என்பது, அவர் வேலூர் கலைச் சங்கத்தில் 'இந்தியக் கலை' என்னும் பொருள் பற்றிப் பேசிய விஷயங்களிலிருந்து தெரிகிறது. தெய்வீகமாக இந் நாட்டில் பல்வேறு ஜாதியினரும் வசிக்கின்றனர். இந்தப் பிரிவினைக் கிடையே ஒற்றுமை காண வழி தேட வேண்டும். கபீர் போன்றவர்கள் இத்தகைய ஒற்றுமைக்குத்தான் உழைத்திருக்கின்றனர். இந் நாட்டில் ஒற்றுமை யுண்டுபண்ண மிகப் பெரிதும் காரணமாக வுள்ளது சங்கீதமாகும்...........உடுப்போ, உணவோ, சமூக வழக்கங்களோ நம்மைப் பிரித்த தில்லை. மொழி இந்து முஸ்லிம்களை ஒன்றுபடுத்தி யுள்ளது......மதம் ஒருக்காலும் மனிதர்களிடையே பிள வுண்டுபண்ணக் காரணமாக இருக்க முடியாது. இந்த மதப் பூசல்களுக்கு இந்து முஸ்லிம் பொது மக்கள் காரணமென நான் சொல்லமாட்டேன். இவ்வித நிலைமைக்குத் தற்காலக் கல்விமுறையே காரணம். தற்காலக் கல்வி முறையினல், பிற நாட்டு விஷயங்களைப் பற்றி நமக்கு அதிகம் தெரியுமே யல்லாது நமது நாகரிகத்தைப்பற்றி ஒன்றும் தெரியாது. இந்தியச் சரித்திரமே புதுமையாகத் திருத்தி யமைக்கப்படவேண்டும். நாம் சுதந்தர புருஷர்களாக, சகோதரர்களாக ஒன்றுபட்டு வாழவும், கலைகளை அபிவிருத்தி செய்யவும் நமது கல்வி முறை உதவி புரிவதாக அமையவேண்டும்." என்று பேசியிருப்பது கவனிக்கத்தக்கது.

ஆகவே, மேற்குறித்த பேரறிஞர்களின் அறிவுரைகளிலிருந்து, நமது சமுதாயத்தை ஒற்றுமைபடுத்தவும், உலகில் அமைதியையும் மகிழ்ச்சியையும் ஏற்படுத்தவும் உதவுவது கலையே என்றும், அக்கலையை அடிப்படையாகக் கொண்டே நம் நாகரிகம் நிலைபெறு மென்றும் நாம் அறிகிறோம்.

# வள்ளுவர் பேசுகிறார்!

(வித்துவான்—எம். சாம்பசிவம்.)



அவையோர்களே! வாழ்க! நான், இன்று 'அறிவுடைமை' என்னும் பொருள் பற்றிப் பேசலாமென்றிருக்கிறேன். ஏனென்றால், உலகத்தில், 'அறிவு' என்பது இப்பொழுது, 'கிடைக்காத பொருள்' என்று நினைக்கக்கூடிய ஒரு நெருக்கடியான சந்தர்ப்பம் ஏற்பட்டிருக்கிறது. அதனாலே இன்று இதைப் பற்றிக் கூறுகிறேன். நிற்க. அவையடக்கம் என்கிற ஒரு 'குல்லாய்ப் போடும் வேலையை' என்னிடம் எதிர் பார்க்கா தீர்கள்.

'அறிவு' என்றால் நமக்கு 'அகால முடிவு' ஏற்படாமல் காக்கக் கூடிய ஒரு சிறந்த பொருள்; அது மட்டு மல்ல; அதை நமக்கு 'அரண்' என்று கூடச் சொல்லவேண்டும்! அரண் என்றால் எப்படிப்பட்ட அரண்? படைகளோடு கிளம்பி வரும் பகைவனாலும் தகர்க்க முடியாத அரண்; செங்கல் முதலியவற்றால் ஊரை வளைத்துக் கட்டுகிறோமே, அந்த அரணா? சே! இது நம் உள்ளத்தில் பகைவன் கண்களுக்கும் தெரியாமல் இருக்கக் கூடிய உள்ளரணாகும்!

"அறிவு," அற்றங் காக்கும் கருவி; செறுவார்க்கும்,
உள் அழிக்கலாகா அரண்!"

அப்படிப்பட்ட அறிவு, இன்னும் என்னென்ன, நமக்கு உதவி செய்யும் வகைகள்? என்று, பார்க்க வேண்டு மல்லவா? 'மனம் வேறு; அறிவு வேறு;' என்று உங்களுக்குத் தெரியும். 'மனம், தீய வழிகளில் நம்மை அழைத்துச் சென்று கவிழ்த்து விடும்' என்றும், உங்களுக்குச் சொல்ல வேண்டியதில்லை. அறிவின் நற் செயல் தானே நமக்குப் புரிய மாட்டேனென்கிறது!

மனம், நம் ஐம் பொறிகளின் வழியாகத் தீய புலன்களை நுகர விழைந்து, அறிவை அடித்து, ஒடுக்கிப் போட்டுவிட்டுக் கிளம்பும்; அப்பொழுது அறிவு, மனத்தொடு போர் புரிந்து மனத்தின் கையி லிருநது நம்மை விடுவித்துக் காப்பாற்றுவதோடு; தன் எதிரியாகிய மனதிற்கும் புத்தி கூறி, தீய வழிகளிலே செல்ல வொட்டாமல் தடுக்கிறது. அதோடு நின்றால், நாம், அறிவைப் பற்றி ஆச்சரியப் படுவதற் கில்லை. மேலும், 'அறிவு', என்ன செய்கிறது பாருங்கள். நம்மையும், நம் மனதையும் சேர்த்து, நல்ல வழிகளிலே திருப்பி, பெருமையை சம்பாதித்துக் கொள் கிறது!

"சென்ற விடத்தால் செலவிடாது; தீதுஒரீஇ
நன்றின்பால் உய்ப்பது அறிவு."

ஆமாம்! அறிவு என்றால் 'இன்னது' என்று நான், இதுவரை கூற வில்லையே! சொல்கிறேன்: 'வெள்ளைக் காரர்களுக்குக் கருப்பு மனிதர்கள்—இந்தியர்கள்—, என்றென்றும் அடிமை வேலை செய்யவே கடவுளால் படைக்கப்பட் டிருக்கிறார்கள்' என்று ஒரு புத்திசாலி கூறுகிறார்! 'அது, தப்பா, சரியா?' என்று ஏதோ ஒன்று உங்களுக்குள் இருந்துகொண்டு வேலை செய்கிற தல்லவா, சரியான முடிவிற்கு வருகிற தல்லவா, அதுதான், அறிவு. இப்படியே—எதை யெடுத்தாலும் சொந்தமாக உங்களுக் குள் ஆராய்கிற தல்லவா, ஒன்று. அதுதான், அறிவு.

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும், அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது, அறிவு."

இன்னொரு விஷயம்:—கொள்கை வேறுபாடு, இயற்கை; ஒருவர் கொள்கை மற்றொருவருக்குப் பிடிக்கவில்லை யென்றால், அதில் வியப் பொன்று மில்லை; அதற்குக் காரணம் வேறு: ஒரே பொரு ளில் உண்மை, பல இருக்கலாம்; உதாரணமாக தேங்காயை எடுத்துக் கொள்வோம்: அதில் நீர் இருப்பதும் உண்மை; கெட்டியான உணவுப் பொருள் இருப்பதும் உண்மை; இளநீரை மட்டும் அனுபவித்தவன், 'கெட்டியான உணவுப் பொருளே தேங்காயில் இல்லை' என்பதும், தேங்காய் நெற்றை உடைத்துப் பார்த்தவன், 'தேங்காயில் நீரே யில்லை' என்பதும், ஒவ்வொரு கொள்கை. இந்தக் கொள்கைகளை வைத்துக்கொண்டு, காட்டுத் தனமாகச் சாதிப்பது—ஆத்திரப்படுவது, பயனற்றது. ஒவ் வொருவனும், தன் கொள்கையை பொறுமையாகவும், தெளிவாக வும், எளிய முறையிலேயும் விளக்கிவிட்டுப் பின், அதே முறையில் பிறர் கொள்கை 'இன்னது' என்பதையும் நன்கு உணர்ந்து கொள்ள வேண்டும்; அப்படிச் செய்வதே, அறிவு.

"எண் பொருளவாகச் செலச் சொல்லி, தான், பிறர்வாய்
நுண்பொருள் காண்பது, அறிவு."

ஆகவே, கொள்கை காரணமாகப் பிரிந்து விடுவது சுலபம்; ஆனால் ஒழுங்கல்ல! அதே போல் கொள்கை ஒத்துவிட்டால், கட்டிக்கொண்டு புரள்வதும் சகசம்; ஆனால், அதுவும் அருவருப் பானதே. ஆக்வே, தன் கொள்கை சிறந்ததாக இருக்கவேண் டும். அதைச் சிறந்தோர் சிறிய அளவினரே யாயினும் அவர் கள் ஒத்துக்கொள்ள வேண்டும்; அதுமட்டும் போதாது; சிறந்த கொள்கைகளே பயின்று வர சிறந்தவர்களை நட்பாக்கிக் கொள்ள வேண்டும்; அவர்களோடு கொள்கை விஷயத்தில் எப்பொழுதும் ஒரே நிலையில் இருக்கவேண்டும், நாம் வேறு; கொள்கை வேறல் லவா, அதற்காகத் தான் சொல்கிறேன். என்றாலும், உண்மைக் கொள்கை பொய்த்து விடாது.

"உலகம் தழீஇயது, ஒட்பம்; மலர்தலும்,
கூம்பலும் இல்லது, அறிவு."

சில சமயங்களில் பெரிய நதிகள், பிரமாண்டமான மரங்களையும், பல பெரும் பொருள்களையும் அடித்துக்கொண்டு செல்வதை நாம் பார்க்கிறோம் ; அப்பொழுது, பிரவாகத்தின் வலிமை, அதிகம் ; அதன்கண் பட்ட எப்பொருளும், வலிமை யற்றதாகி விடுகிறது. அதேபோல், அறிவும் சில சந்தர்ப்பங்களில் அறியாமை வெள் ளத்தில் அடித்துக்கொண்டு போகப்படலாம் ! ஆனால், அறிவே முடிவில் வெல்லும்; பதுங்குவது பாய்ச்சலுக் கறிகுறியல்லவா? ஊரே ஓடும்போது நீயுந்தான் ஓடவேண்டும் ! முட்டாள்களிடத் தில் முட்டாள் போல் நடித்துதான் காரியத்தைச் சாதிக்க வேண் டும் !

வெளியார்முன் வான்சுதை வண்ணங் கொளல் !
ஒளியார்முன் ஒள்ளிய ராகலாம் !

ஆகவே, உலகம் முட்டாள் தனமாகப் போனாலும், அதன் போக் கிலே நீயும் போ ; அதுதான், அறிவு !

**"எவ்வது உறைவது உலகம் ; உலகத்தோடு**
**அவ்வது உறைவது, அறிவு."**

தீர்க்க தரிசனமே, அறிவு. வருவதை—அறிவு, உணரும். அறிவு எங்கெங்கு இல்லையோ, அங்கங்கெல்லாம் எதிர் கால நிகழ்ச்சிகள், இருக்கா ; முன்னேற்ற மிருக்காது.

**"அறிவுடையார், ஆவது அறிவார் ! அறிவிலார்,**
**அஃது அறிகல் லாதவர்."**

கழுதைப் புலி, காட்டிலே இருந்தாலும், அதன் பார்வையில் தப்பித் தவறி காணப்பட்டுவிட்ட அறிவாளி, அதைக் கண்டு அஞ்சாமல் இருக்கலாமா? அஞ்சினால் தானே பிழைத்துக் கொள்ள ஏதாவது 'ஏது' ஏற்றப்படலாம்? தீர்மானமாக அங் கேயே அஞ்சாமல் நின்றால், 'அறிவாளி' என்று, புலி, விட்டு விடுமா? முட்டாள்களின் கூட்டத்திற்குள்ளே அகப்பட்டுவிட்ட அறிவாளி, அஞ்சித்தான் ஆகவேண்டும் ; அதுதான், அறிவு ! 'அறிவு, எனக்குத்தான் இருக்கிறது' என்று அறிவாளி அங்கே அஞ்சாமல் மார் தட்டுவானானால், அறிவாளியின் எலும்பு, உருப் படியாக ஒன்று கிடைக்குமா, ஒன்று !

**"அஞ்சுவது அஞ்சாமை, பேதைமை ! அஞ்சுவது**
**அஞ்சல், அறிவார் தொழில்."**

முன் எச்சரிக்கையாக இருக்கச் செய்யும் 'அறிவு', ஒருவனுக் கிருந்தால், அவனுக்குத் துன்ப மேது ?

**"எதிரதாக் காக்கும் அறிவினார்க்கு இல்லை,**
**அதிர வருவதோர் நோய்."**

அறிவே, ஒருவனுக்குச் செல்வம் ! எல்லா நலமும், அறிவுடையவ னுக்கு வாய்க்கும். 'அறிவு' இல்லாத ஒருவன், குபேரனுக்குப்

# கோமதியின் காதலன்

A. S. கோபாலன் B. A.



**சா**யங்காலம் சுமார் ஏழுமணியிருக்கும். சென்னை கடற்கரை சந்திரன் தன் வெண்ணிறப் போர்வையை உலகெங்கும் பரப்பிக்கொண்டிருந்தான். வெண் திரைகள் கடற்கரை மீது மிகவும் கோபங்கொண்டதுபோல் சீறி மோதிக்கொண்டிருந்தன. நீல நிறமும் நில ஒளியின் வெண்ணிறமும் ஒன்று கலந்து ஒருவிதமான மனோகர வர்ணத்தைக் கொண்டிருந்தது.

ரமணன் உலக சிந்தனைகளையும், வாழ்க்கைப் போர் கவலை முதலியவற்றையும் மறந்து தன் முன் தோன்றிய இயற்கை வனப்பில் ஈடுபட்டிருந்தான். ஆகவே அவன் பின்புறம் வந்த ஆசாமியைக் கவனிக்கவில்லை. ரமணன் தன் கண்களை மெல்லிய இரு கரங்கள் பொத்துவதைக் கண்டு திடுக்குற்றான். கையை மெதுவாக விலக்கிப் பார்த்தான். என்ன ஆச்சரியம்! தன் முன் கோமதி நிற்பதைக் கண்டு ஆச்சரியமுற்றான்.

* * * *

கோமதியும் ரமணனும் ஒரு வகுப்பில் ஸர்வ கலாசாலையில் பயின்று வந்தார்கள். கோமதி ஹைகோர்ட்டு ஜட்ஜ் ஒருவரின் புத்திரி. மிகவும் செல்வமாகவும் சிறப்பாகவும் வளர்க்கப்பட்டவள். ரமணன் ஓர் ஏழை. தனது தாயாருடன் சென்னையில் ஒரு சிறு வீட்டில் வசித்து, எளிய வாழ்க்கை நடத்திவந்தான். கலாசாலையில் கிடைக்கும் உதவிச் சம்பளத்தைக் கொண்டு வாழ்க்கை நடத்தி வந்தான்.

கோமதி ரதி என்று சொன்னால் ரமணன் ஓர் மன்மதனென்றே சொல்லவேண்டும். இருவரும் வகுப்பில் முதலாவதா

---

பிறந்தாலும், ஏழையாகி விடுவான். அறிஞன், பணமூட்டையில்லாமலேயே உலகத்தைச் சுற்றி வந்து, உண்மைகளை நிலை நாட்டுவான். அறிவில்லாத பணக்காரன் தன் வேலையாளிடத்தில் இருந்துகூட ஞானத்தைக் 'கடன்' வாங்கவேண்டியிருக்கும்!

"அறிவுடையார், எல்லாம் உடையார்! அறிவிலார்,
என் உடையரேனும், இலர்."

அவையோர்களே! சுருக்கிச் சொல்லியே எனக்குப் பழக்கமாய் விட்டபடியால், இத்துடன் என் சொற்களைச் சுருக்கிக் கொள்கிறேன். அவசியம் ஏற்பட்டால் மீண்டும் உங்கள் அவைக்கு வந்து, இரண்டொன்றைச் சுருக்கியே சொல்ல விருப்புடையேன்; வணக்கம். 'முடிவு அடக்கமும்' எனக்குத் தெரியாது.

கப் பயின்று வந்தார்கள். ஒரே இஷ்டப்பாடம் இருவருக்கும். இடையே சிறந்த நட்பு வளர்ந்து கொண்டே வந்து காதலாக மாறியது. ரமணன் தன் எளிய நிலைமையை எடுத்துக் கூறி தன் காதல் "முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்படுவது போன்று" என்று சொல்லி மனமுடைவான். கோமதி அவனைத் தேற்றி தான் எவ்விதமேனும் அவனையே மணப்பதாகச் சொன்னாள். பல வழிகளிலும் அவனுக்கு பணவுதவியும் செய்து வந்தாள்.

தன்னை எதிர்பாராது சந்தித்த கோமதியை நோக்கி ரமணன் புன்சிரிப்பாக அவள் வரவு எதிர்பாராதது என்று தெரிவிக்க, அவள் பதில் பேசாது மௌனம் சாதித்தாள். பின்பு அன்று வகுப்பில் ஜகந்நாதனுக்கும் தனக்கும் நடந்த சச்சரவை கோமதியிடம் சொன்னான்.

ஜகந்நாதன் ஓர் வக்கீல் மகன். கோமதி வகுப்பில் பயின்று வந்தான். கோமதி மீது காதல்கொண்டு அவளை பலமுறை சந்தித்து தன் மனோநிலையை வெளிப்படுத்த, கோமதி அவனை அலட்சியம் செய்து வந்தாள்.

அன்று வகுப்பில் ஜகந்நாதன் ரமணனைப் பலவாறுகப் பேசியும், இகழ்ந்தும் கோமதியை காதலிப்பதா யிருந்தால் உயிர் இழக்க நேரிடும் என்றும் பயமுறுத்தினான்.

* * * *

காதலர் இருவரும் கடற்கரை ரஸ்தா வழியே சம்பாஷித்துக் கொண்டே, சைனு பஜார் வழியாக வீட்டை நோக்கி வந்து கொண்டிருந்தனர். இரவு சுமார் 12½-மணி யிருக்கும். திடீர் என்று நால்வர் ரமணன் மீது பாய்ந்து அவனைக் கீழே தள்ளி புடைக்க ஆரம்பித்தனர். மின்னல் வெட்டுப்போன்று, ரமணன் தன்னை சமாளித்துக்கொண்டு அவர்களை விலக்கிக்கொண்டு, நால்வரையும் வேரற்ற மரம்போல் சாயவைத்து விட்டான். அவன் பெரிய குத்துச் சண்டைக்காரன் என்பதை எதிரிகள் எதிர்பார்க்கவில்லை.

அடுத்த க்ஷணம் கோமதியைக் காணவில்லை. அவளை யாரோ ஒருவன் தூக்கிக்கொண்டு ஓடுவதைக் கண்டு அவனை பின் பற்றி நெருங்கியதும் மண்டையில் ஓர் குத்து விட்டான். அவன் பொட்டெனக் கீழே வீழ்ந்து விட்டான். உடனே கோமதியை அதிவிரைவில் அழைத்துக்கொண்டு தத்தம் வீடு சென்றனர். நடந்த செயலை நினைத்து, தன்னைத் தாக்கியது ஜகந்நாதனு யிருக்குமோ என்ற பலத்த சந்தேகம்.

மறுநாள் வழக்கம்போல் வகுப்பில் மாணவர் கூடினர். கோமதியும் ரமணனும் தத்தம் இடத்தில் அமர்ந்தனர். ஜகந்நாதனை அன்று காணவில்லை. பிறகு அவன் ஏதோ பலத்த காயம்பட்டு ஆஸ்பத்திரியில் இருப்பதாகத் தெரிய வந்தது.

* * * * *

நாட்கள் பல சென்று கழிந்தன. நிகழ்ந்த பரீக்ஷையில் இரு காதலர்கள் அமோகமான வெற்றி யடைந்தனர். தற்கால வாழ்வை யுத்தேசித்து ரமணன் ரங்கூன் செல்ல ஆயத்தமானான். காதலர்கள் பிரிவை சகிக்க முடியாமல் கண்ணீர் உதிர்த்தனர். ரமணன் புறப்படுவதற்கு மூன்று நாட்கள்தான் இருந்தன.

குறித்த நாளன்று மாலை ரமணன் கப்பல் ஏறி விட்டான். எதிர்பார்த்தமாதிரி கோமதியைக் காணவில்லை.

தனது "கேபின்"னில் இருவர் இருக்கவே இட வசதி யுண்டு. தன்னுடன் இருக்கும் பிரயாணி யார் என்றறிய மிகவும் ஆவல் கொண்டான். கப்பல் புறப்பட்டுவிட்டது. பெரும் ஏமாற்றத்துடன் கடற்கரையையும், தன் காதலி கோமதியையும், ஆதரவற்ற தாயையும் நினைக்க கண்களில் கண்ணீர் ஆறுய்ப் பெருகிற்று.

இரவு பத்து மணிக்கே தனது அறையை நாடிச் சென்றான். தனனுடன் இருப்பது ஓர் மாது என்று அறிய மிகவும் ஆச்சரியம் கொண்டான். ஆவல் குறைந்தபாடில்லை. தன் படுக்கையில் புரள ஆரம்பித்தான். உறக்கமே வரவில்லை. சற்று நேரத்திற்குப் பின் "ஹாலோ ரமணன்! என்ன, கோமதியை அதற்குள் மறந்து விட்டீர்களோ" என்று கேட்டுத் திடுக்குற்று நோக்க, தன் அண்டையில் கோமதி என்றுமில்லாத அழகுடன் நின்று கொண்டிருப்பதைக் கண்டான். தான் காண்பது கனவா நினைவா என்று அவனுக்கு விளங்கவில்லை. கோமதி தன்னை நெருங்கி வந்து ஆலிங்கனம் செய்து ஓர் முத்தம் கொடுத்த பிறகே, உண்மை என்பது புலனாயிற்று.

இரவின் ஏகாந்தத்தில் காதலர் இருவரும் காந்தர்வ மணம் புரிந்து கணவனும் மனைவியும் ஆயினர்.

* * * *

ஹைகோர்ட்டு ஜட்ஜுக்கு மறுநாள் தன் மகள் கோமதியிடம் இருந்து ஓர் கடிதம் வந்தது.

"என் பிரியமுள்ள தந்தையே! என்னைத் தேடவேண்டாம். நான் என் வாழ்க்கைத் துணைவனைத் தேடிக்கொண்டு வாழ்க்கையாரம்பித்து விட்டேன். கூடிய சீக்கிரம் தம்பதி சமேதராய் காட்சி யளிப்போம். கோமதி."

---

# ஜீவன் முக்தி

(என். நாகராஜன்)



அவள் நாட்டியமாடினபோது அவள் கால் சிலம்புகள் கலீர் கலீர் என்று இனிமையாக சப்தித்தன. ஒரு மயில்தான் தன் பல வர்ண தோகையை விரித்து ஆடுகிறதோ என்று பிரமித்தான் முகலாய சக்ரவர்த்தி ஜிஹாங்கிர். சித்திரப் பதுமைபோல் இமை கொட்டாமல் அவள் அழகையே பருகிக் கொண்டு சிங்காதனத்தில் அமர்ந்திருந்தான் அவன். அவள் தேகத்தில் என்ன மினு மினுப்பு! என்ன பளபளப்பான கன்னங்கள். அந்த நுதற்கீற்றிலே என்ன லாவண்யம்.

அவள் பெயர் ஜீவா; அரண்மனை நாட்டியக்காரி. அவளை ஒரு தெய்வம்போல் மனதில் எண்ணி வந்தான் ஜிஹாங்கிர். அவள் சிவந்த முறுவல் மன்னன் மனதைக் கொள்ளை கொண்டது.

ஆனால், முகலாய சக்கரவர்த்தி தன்னை அணுக வொட்டாமலே தடுத்து வந்தாள் ஜீவா. ஜிஹாங்கிருக்கு அந்த இளரோஜாவை கசக்கி முகர விருப்பமில்லை. ஒரு தடவை அவனையும் மீறி அந்த ரோஜாவைக் கசக்க முன் வந்து விட்டான் மதிமயங்கி. அப்பொழுது ஜீவாவின் இடையிலிருந்த குறுவாள் அவள் மார்பகத்தை முத்தமிட்டுக் கொள்ள ஆயத்தமாயிருந்தது. அது முதல் தூரத்திலிருந்தே அவள் அழகை அனுபவித்தான் முகலாய மன்னன். கிட்ட நெருங்கி அழகைப் பலி கொடுக்க மன்னன் மனம் வரவில்லை.

யமுனா நதி தீரத்தில் ஒரு அழகிய பர்ணசாலை. செங்கதிரின் சாயங்கால கிரணங்களில் யமுனை பொன் நிறமாய் பிரகாசித்தது. பட்சிகள் "கிரீச் கிரீச்" என்ற பலவித சத்தங்களை கிளப்பிக் கொண்டிருந்தன. சிலு சிலு வென்று வீசிய தென்றல் கோடை வெப்பத்தைத் தணித்தது.

பர்ணசாலையின் உட்புறத்தில் தான் எழுதின சித்திரத்தையே உற்று நோக்கிக்கொண்டிருந்தான் பிரபாகரன். சட்டென்று எதையோ நினைத்துக் கொண்டவன் போல் வர்ணக் கோலை சிவப்பு வர்ணத்தில் தோய்த்தான். அடுத்த கணம் அது அவன் எதிரிலிருந்த பாலகிருஷ்ணனின் சிவந்த அதரங்களை மெதுவாக வருடிக்கொண்டிருந்தது. அப்போது அவன் மனம் பர்ணசாலையின் வாயிற் படியில் நின்றுகொண்டிருந்த மோஹினியைக் கூடத் திரும்பிப் பார்க்கச் செய்யவில்லை. அது ஓரேயடியாய் அந்த சித்திரத்தில் லயித்துப் போயிருந்தது. வாயிற் படியில் நின்று கொண்டிருந்த மோஹினி வேறு யாருமில்லை; ஜீவாதான்.

பிரபாகரன் அரண்மனை சைத்ரீகன். அவன் மனதிலெழுந்தவையெல்லாம் உயிருள்ள சித்திரங்கள் போல் மாறி யாவரையும்

பிரமிக்கச் செய்தன. முகலாய சக்கரவர்த்தியின் அரண்மனையின் உள்ளும் புறமும் இவன் படங்கள் சுவர்களை அலங்கரித்தன. சிவந்த மேனி; பால் வதனம். இவன் பரந்த மார்பு ஒருதரம் ஜிஹாங்கீரைக்கூட மெச்சச் செய்திருக்கிறது.

ஜீவாவின் மனதில் வாசம் செய்து கொண்டிருந்தான் பிரபாகரன். அவன் மார்பைத் தழுவ அவள் கைகள் வருந்திக் கிடந்தன. தன் அன்பு முழுதையும் மாலையாகத் தொடுத்து வைத்திருந்தாள் ஜீவா. பிரபாகரனுக்கு சூட்டத்தான்.

பாவம். அவள் காதலை யறியாது அவளை விலக்கியே வந்தான் பிரபாகரன். அவன் ஒரு பைத்யம்; சித்திரங்களிலேயே லயித்துக் கிடக்கும் அவன் மனம் வெளி உலக இன்பங்களை நாடவேயில்லை. அவன் அவைகளைத்தான் காதலித்தான். இவனிடம் பேதை ஜீவா தன் உள்ளத்தைப் பறிகொடுத்து விட்டாள். அவன் மனதில் அவளுக்கு இடம் எங்கே?

அன்று எப்படியும் அவனைத் தன் வசப்படுத்தி ஓர் முடிவுக்கு வர வேண்டுமென்ற தீவிர எண்ணத்தோடு தான் ஜீவா அங்கு நின்று கொண்டிருந்தாள். பிரபாகரன் கொஞ்சமும் திரும்பிப் பார்ப்பதாக தோற்றவில்லை. சட்டென்று அவளுக்கு என்னவோ தோன்றிற்று. தன் சிவந்த பாதத்தால் கீழே வைத்திருந்த சிவப்பு வர்ணத்தை தட்டி உருட்டிவிட்டாள். அது ஒரு பக்கம் வழிந்து ஓடிற்று. பிரபாகரன் திடுக்கிட்டுத் திரும்பினான்; அவன் சுய உணர்வு வந்தது.

"யார்? ஜீவாவா?......இப்படித்தானா விளையாடுவது? என் வர்ணமெல்லாம் போச்சே!" என்று சொல்லி அவற்றை வழிக்க ஆரம்பித்தான்.

"அதை அப்புறம் வழிக்கலாம். இதோ இங்கே வா. ஒரு வார்த்தை." என்றாள் ஜீவா.

அரை மனதுடன் அதைவிட்டு எழுந்து சென்றான் பிரபாகரன். இருவரும் யமுனை மணற்கரையில் உட்கார்ந்து கொண்டனர்.

"ஏன் பைத்தியம் மாதிரி சித்திரமே கதி என்றிருக்கிறீர்கள்" அந்த மௌனத்தை கலைத்தாள் ஜீவா.

"உனக்கென்ன அதைப்பற்றி?" என்றான் பிரபாகரன். பிறகு சிறிது நேரம் இருவரிடையும் மௌனம் நிலவியது.

"என்னவோ விஷயமென்றாயே, சீக்கிரம் சொல். நான் போக வேண்டும்." என்று அவசரப்படுத்தினான் பிரபாகரன். அவன் மனமெல்லாம் சித்திரத்தின் மேலேயே சென்றிருந்தது.

"ஒன்றுமில்லை." லஜ்ஜையுடன் ஜீவா பதிலளித்தாள் ஒரு பெருமூச்சுடன். அவளுக்கு என்னவோ வெளிப்படையாக கூற தைரியம் ஏற்படவில்லை.

"சரி. நான் போகிறேன்" என்று எழுந்தான் பிரபாகரன். இனி தாமதிப்பதில் பயனில்லை என்பதை அவள் கண்டு கொண்

டாள். அவன் கால்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள் அவனைப் போகவொட்டாமலே.

“பிரபா, என் பிரேமையை நீ அறியவில்லையா ? உன் அன்பு, காதல்...அதைத் தான் வேண்டுகிறேன். என் எண்ணத்தை குலைத்துவிடாதே.” அவுன் பாதத்தில் முகம் வைத்து அழுதாள் ஒரு காதல் விம்மிலிடை.

“இதற்காகத்தானு என் வேலையைக் கெடுத்தாய். சீச்சீ விடு...” என்று தன் கால்களை விடுவித்துக் கொண்டு பர்ணசாலையை நோக்கி ஓடினுன் பிரபாகரன். மறுபடியும் சித்திரம் எழுத உட்கார்ந்து விட்டான்.

ஜீவாவுக்கு ஒன்றுமே புரியவில்லை. அந்த அளவற்ற துக்கம், மனத்தாங்கல் அரைக் கணத்தில் கோபமாக மாறிவிட்டது. ஒரே ஓட்டமாக ஓடினுள் பர்ணசாலைக்குள். அவன் வர்ணக்குச்சியை பிடுங்கி ஒடித்து சித்திரத்தையும் பிய்த்துக் கசக்கி எறிந்து விட்டாள்.

பிரபாகரன் திடுக்கிட்டான். அழகான பாலகிருஷ்ணனின் உருவம் சின்னுபின்னமானதைப் பார்த்ததும் அவனையும் மீறி கோபம் உண்டாயிற்று. தரதரவென்று ஜீவாவின் கூந்தலைப் பற்றி யிழுத்து,

“அடி சண்டாளி, என் பாலகிருஷ்ணனைக் கொலை செய்து விட்டாயே” என்று சொல்லிப் பளீரென்று கன்னத்தில் அடித்து வெளியே தள்ளி விட்டான்.

“இனி என் முன் வராதே. ஒழிந்துபோ” என்று பர்ணசாலைக் கதவை மூடினுன்.

* * *

அன்று பௌர்ணமி. வானத்தில் இளம் சந்திரிகை. யமுனைக் கரையிலிருந்த ஜிஹாங்கிரின் உல்லாச மாளிகை அந்த நிலவில் பால் போல் பிரகாசித்தது. உல்லாச மாளிகையின் மாடியில் பட்டு மஞ்சத்தில் சாய்ந்து கொண்டிருந்தாள் ஜீவா. அவள் அருகில் ஹுக்கா புகையருந்திக் கொண்டே, அவள் எழிலில் மயங்கி யிருந்தான் சக்கரவர்த்தி. அந்த பாரசீகக் கிளி தானுகவே தன் கூட்டில் வந்த மகிழ்ச்சி அவனுக்கு.

“அதோ ?” என்றுள் ஜீவா விரசத் தொனியில். ஜிஹாங்கீரின் கண்கள் அங்கே சென்றன. சைத்ரீகன் பிரபாகரன் யமுனைக் கரையில் அதன் அழகில் ஈடுபட்டிருந்தான்.

“என்ன விரும்புகிருய் ?” என்றுன் ஜிஹாங்கீர். அவன் கேள்விக்கு அவள் ஒரு சமிக்கை செய்தாள். பாம்பு விஷத்தைக் கக்கிவிட்டது. ஜிஹாங்கீர் சிறிது நேரத்தில் எழுந்துபோய் திரும்பினுன். அவள் வஞ்சத்தைத் தீர்த்துக் கொண்டாள். ஆம். பிரபாகரன் தன் மலர் விழிகளை இழந்து கதறுவது இவளுக்கு எப்படிக் கேட்கப் போகிறது ?

* * *

எட்டு வருஷங்கள் தோன்றி மறைந்தன. யோசியாமல் என்ன காரியம் செய்து விட்டேன் என்று கதறினாள் ஜீவா படுக்கையில் புரண்டு கொண்டே. 'அடி பாவீ! என்ன பாவத்தைக் கட்டிக் கொண்டாய்' என்று அவள் மனம் வாள் போல் அறுத்தது. உயிர் போவதற்கு முன் பிரபாகரனிடம் பாவ மன்னிப்பைப் பெற நெஞ்சு துடித்தது. இதே ஏக்கத்தில் துரும்பு போல் ஆகிவிட்டாள். இப்போது குரூபி என்றால் ஜீவாவையே சொல்லலாம். அவள் செய்த பாவமும், அவன் மீதுள்ள பிரேமையும் அன்றையதினம் முதலே பிரபாகரனை நாற்புறமும் தேடச் செய்தாகி விட்டது. பல பக்கங்களிலும் தேடி வருஷங்கள் சென்றது தான் மிச்சம். பிரபாகரனை எங்குமே காணவில்லை.

கோதாவரி நதிக்கரையோரமாக மூடு பல்லக்கு ஒன்று சென்று கொண்டிருந்தது. பல்லக்கினுள் ஜீவாதான் உட்கார்ந்திருந்தாள்—இல்லை—ஒரு எலும்புக்கூட்டினுள் உயிர் மாத்திரம் உட்கார்ந்திருந்தது. முன்னும் பின்னும் பல ஆட்கள் காவல் சென்றனர். பிரபாகரனைத் தேடிப் பல பக்கங்களிலும் யாத்திரை தொடங்கி விட்டாள் ஜீவா.

வெய்யில் அதிகமாயிருந்ததால் பல்லக்கை அவர்கள் ஒரு மா நிழலில் இறக்கிவிட்டு சற்று இளைப்பாறினார்கள். ஜீவாவுக்கு நதிக் கரையை சுற்றிப் பார்க்க வேண்டுமென்ற ஆசை எழுந்தது. பல்லக்கை விட்டு இறங்கி சற்று தூரம் தனியாகவே நடந்தாள். இரண்டு பர்லாங்கு தூரம்கூட சென்றிருக்கமாட்டாள் பெருமூச்சு வாங்கிற்று. சக்தியற்று மயக்கம் தட்டிற்று. உணர்ச்சியின்றி கீழே விழுந்துவிட்டாள்.

கண் விழித்தபொழுது ஒரு பர்ணசாலையில் படுத்திருந்தாள் ஜீவா. ஒரு இளைஞன் விசிறிக் கொண்டிருந்தான். சுற்றிலும் பார்த்தாள். தன் பக்கத்தில் உட்கார்ந்திருக்கிறாரே அவர்—அவருக்கு இரண்டு கண்களும் இல்லை.

அதோ அந்த முகம்! எங்கோ பார்த்தது போலிருக்கிறதே! பிரபாவா?—ஆம். கனவு காண்கிறேனா? இல்லை. ஒரே யடியாய் பல எண்ணங்கள் எழுந்தன. தேகத்தில் சொல்ல முடியாத ஒரு சக்தி. சடாரென்று எழுந்து அவன் பாதத்தில் விழுந்துவிட்டாள்.

"நான் தான் ஜீவா...பாவி...கண்ணிழக்கச் செய்தவள்... பிரபா...மன்னிப்பாயா?" நா குழறிற்று.

பிரபாகரன் திடுக்கிட்டான். "யார்? ஜீவாவா?"—அவளை இருகைகளாலும் தூக்கினான். அவன் தூக்குவதற்கு முன்பே அவள் ஜீவன் அவள் உடலைவிட்டு அகன்று விட்டது. அது—அந்த ஜீவன் அவன் பாதத்தில் முக்தியடைந்து விட்டது.

பாவ மன்னிப்பிற்காக தன் ஜீவனையே அளித்துவிட்டாள் ஜீவா. அந்த ஜீவனற்ற உடலைத் தழுவிக்கொண்டான் பிரபாகரன். அவன் கண்களினின்றும் தாரை தாரையாக வழிந்தோடின நீர் அவள் பாவத்தை மன்னிப்பது போலிருந்தது.

# ஜ்யோதிஷ பல ரகஸ்யம்

## (சி. பி. ஆனந்தம்.)



### யுரேனஸ் (URANUS)

மேலைப் புலவர்களால் பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில் கண்டு பிடிக்கப்பட்ட 'யுரேனஸ்' என்னும் கிரகத்தின் முக்கியத்துவத்தை மிகவும் உணர்ந்து, அதைப் பற்றிய விவரங்களை மேலும்-மேலும் அறிய வான ஆராய்ச்சிக் குழுவினர் அது முதல் இடைவிடாது கவனஞ் செலுத்திய வண்ணம் இன்றளவும் இருந்து வருகின்றனர்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் அந்தக் கிரகம் தன் சுற்று வீதியினின்றும் சற்று விலகிச் செல்லும் மாறுதலைக் கண்டனர். அவ்விதம் அதன் கதி அவ்வப்போது சிறு சிறு மாறுதல்களுக்கு உள்ளாவதன் காரணத்தைப்பற்றி ஆராயத் தொடங்கினர். மற்றொரு கோள் ஏதோ ஒன்று யுரேனஸுக்குப் பின்னே இருந்து, அதைப் பிடித்து இழுப்பதால் தான் அத்தகைய மாறுதல் அதன் கதியில் நேருகிறதென்று ஊகித்தனர். எனவே, யுரேனஸின் கதியைப் பாதிக்கும்படி இழுக்கும் ஒரு கோளைக் கண்டு தீர வேண்டுமல்லவா!

ஆம், அதற்கான முயற்சி எடுத்துக் கொள்ளப்பட்டது. சுமார் அரை நூற்றாண்டுக்கு மேலாக விடாது ஆராய்ந்து வந்தும், யுரேனஸின் கதியைப் பாதிக்கும் ஆற்றல் வாய்ந்த அக் கிரகத்தைக் கண்டுகொள்ளக் கூடாமலேயிருந்தது.

பின்னர், நியூட்டன் என்னும் கணக்கறிஞருடைய சித்தாந்தங்களைத் தழுவி, அக் கோள் வானத்தில் இடம் பெறத்தக்க எல்லையை கணக்கிட்டு, அதன்படி கருவிகளின் மூலம் அதைக் காண முயன்று வந்தனர். கணித முறைப்படி அந்தக் கிரகம் வானத்தில் இன்ன இடத்தில்தான் இருக்க வேண்டுமென்று வற்புறுத்தி வந்தவர்களில் ஆடாம்ஸ், லெவெரியர் (Adams, Leverrier) என்னும் கணித நிபுணர் இருவர் ஆவர். இவர்களில் முன்னவர் இங்கிலாந்தையும், பின்னவர் பிரான்ஸு தேசத்தையும் சேர்ந்தவர்கள். கடைசியாக, பெர்லினில் டாக்டர் காலே (Dr. Galle) என்பார் 1846-ம் ௵ ஸெப்டெம்பர் மாதம் 23 தேதி யன்று அந்தக் கிரகத்தைக் கண்டார். இந்த நூதனக் கோளே 'நெப்டியூன்' (Neptune) ஆகும். நெப்டியூன் என்றால் சமுத்திர ராஜனாம். அந்தக் கருத்தில் தான் நம்முடைய நாட்டிலும் 'வருணன்' எனக் கொண்டார்கள் அறிஞர்கள்.

**இடம் பெறும் எல்லை:**—நெப்டியூன் என்னும் வருண மண்டலம் பூமிக்கு வெளியே யுரேனஸ்—நிருதி மண்டலத்திற்கு அப்பால்

இடங் கொண்டுள்ளது. இதுவும் நமது சூர்யனை நடுவாக்கி அதனைச் சுற்றி ஓடும் கோள் இனங்களுடன் சேர்க்கப்பட்டிருக்கிறது. இது சூர்யனிலிருந்து இருபத்து ஏழாயிரத்து ஏழுநூற்று ஐம்பது லட்சம் மைல்கள் தூரத்தில் இதன் சுற்று வீதி அமைந்துள்ளது.

**பரிமாணம் முதலியன:**—பூமியினும் அறுபது மடங்கு யுரேனஸைப் போலவே அவ்வளவு பெரியதென்று தோராயமாகக் கருதப் படுகிறது. ஆனால், உண்மையில் யுரேனஸுக்கும்-நெப்டியூனுக்கும் பரிமாணத்தில் வித்தியாஸம் இருக்கிறது. இதன் குறுக்களவு முப்பத்து ஓராயிரம் மைல்களாகும். இதன்படி யுரேனஸை விட் நெப்டியூன் பரிமாணத்தில் சிறியதென்று கொள்ளவேண்டும். பெர்னாட் என்னும் வானநூற் புலவர் இதன் குறுக்களவை முப்பத்து மூவாயிரமாகக் காணுகிறார். அவருடைய கணக்குப்படி யுரேனஸிலும் பெரியது நெப்டியூன் என்னலாம்.

இதன் வண்ணம் சில காலத்தில் மட்டும் யுரேனஸைப் போல பச்சை நிறமாகக் காட்சிக்குப் புலனாகிறதாம். எனவே, இதன் நிரந்தரமான வண்ணம் இன்னதென்று நிச்சயிக்கக் கூடவில்லை.

**கதிகள்:**—நெப்டியூன், சூர்யனை விநாடி ஒன்றுக்கு மூன்றரை மைல்கள் வீதம் சுற்றி வருகிறது. இந்தக் கணக்கில் இது சூர்யனை ஒரு தடவை சுற்றி முடிக்க நூற்று அறுபத்து ஐந்து ஆண்டுகள் இதற்கு வேண்டியதிருக்கிறது.

இதர கிரகங்களைப்போல, தன்னைத்தான் சுற்றிவரும் கதி இதற்கும் இருக்கவேண்டும் என்று இயற்கை விதிகளின்படி நிச்சயிக்கின்றனர். ஆனால், அவ்விதம் அது தன்னைத்தான் ஒரு தடவை சுற்றி வர அதற்கு எவ்வளவுகாலம் பிடிக்கிறது என்று இன்னும் கண்டாகவில்லை. ஏனெனில், அதற்கு வேண்டிய அடையாளக் குறிக்கு ஏற்றன எதுவும் அக் கிரகத்தில் தெளிவாகப் புலனாகவில்லையாம்.

---

கணக்கு வாத்தியார் 'பட்டி தயார் செய்தல்' என்னும் பகுதியை நடத்திக்கொண்டிருந்தார். சில சாமான்களின் விலையைக் கொடுத்து விட்டு கோபாலனைப் பார்த்து, "கோபால்! அரைபடி அரிசி, அரை வீசை வெல்லம், ஐந்து பலம் நெய், கால்படி பயிற்றம்பருப்பு இவைகள் சேர்ந்தால் என்ன ஆகும்?" என்று கேட்டார்.

"அவற்றை வேகவைத்து, வறுத்த முந்திரி பருப்பையும் சேர்த்து விட்டால் நல்ல பொங்கல் ஆகும், சார்" என்றான்.

* * * *

ஒருவர்:—நீங்கள் வடகலையை ஆதரிக்கிறவரா? அல்லது, தென்கலையை ஆதரிக்கிறவரா?

மற்றவர்:—அது என்னமோ, ஸ்வாமி! நான் **பொங்கலை** ஆதரிக்கிறவன் என்பது மட்டும் உண்மை.

# பாரதப் பொங்கல்



'வந்தேமாதரம் என்றுயிர்போம் வரை' என்ற பாரதி பாடல் மெட்டு

பாரதத்தின் இளந் தோள்களுயர்வீரக்
காளைகாள்—இளம்—பசுக்காள் !
பாரத்திற் கஞ்சிப முந்தினி யசை
போடாதீர்—படுத்து—றங்காதீர் ! (1)

வீர சுதந்திர பாரதம் நம்ம
தல்லவோ—அதைச் சொல்லவோ
வீர சிவாஜியும் சாந்த்பீபி நந்துணை ;
அல்லவோ—வீர—ரல்லவோ ? (2)

கண்ணன் அர்ச்சுனன் நங்குலத்தை அன்று
மேய்த்திட்டார்—நம்மைக்—காத்திட்டார்
கன்னன் கவர்ந்தூர்ந்த விராட்புர நிரைக்
காத்திட்டான்—கிரிடி—மீட்டிட்டான். (3)

அன்றந்த நிரையை மீட்கச் சென்ற உத்ர
குமரன்—தலை—அர்ச்சுனன்
இன்றிந்த பாரதப் போரிடைத் தோள்கொடு
குமார்—தலை—ஜவஹர். (4)

கண்ணன் பிரதாபன் விவேகானந்த னன்று
ஓட்டினார்—இன்ப—மூட்டினார்
பண் இன்று காந்திஜி வீரசிதம்பரம்
பாரதி—படை—ஓட்டுறார். (5)

இயற்கைப் பசுந்தரைப் புன்னிரைக் காட்டிடை
வாழ்ந்திட்டீர்—வன்மை—ஓங்கிட்டீர்
முயற்சி மிகத்தரு கேழ்வரகு களி
கோதுமை—உண்டு—வீறிட்டீர். (6)

இயற்கைக் கிராமங்களை வெறுத்துடன் நகரத்தை
மேவுவீர்—உடல்—காயுவீர்
முயற்சி யழி காபி மில்லரிசி புகை
யுண்ணுவீர்—பொம்மை—யாடுவீர். (7)

கட்டு உடலினில் ஆண்மை மிகத்தேக்கி
சிங்கம்போல்—மைந்தர்—பெற்றிட்டீர் (இன்று)

பட்டு உட்லுடன் வீணுண்மை போக்கிட்டு
பேடிபோல்—பிள்ளை—பெருநீர்— (8)

குண்டு சாடினும் நின்று பொறுத்திடும்
உள்ளமும்—உடல்—திண்மையும்
கொண்டு பகைவரை அன்பு வார்த்தை சொல்லி
திருத்துவோம்—உண்மை—யுணர்த்துவோம். (9)

இன்றேல் மெய்யறி வஹிம்ஸை சத்தியப்
போரிடை—விடுதலைப்—போரிடை
குன்றனைப் பொறுமை உள்ளநிறையன்பு—
உண்மையைக்—கொண்டு—மாய்குவோம். (10)

அந்த உணர்ச்சிப்பால் பொங்கிட இன்று நாம்
ஆடுவோம்—பள்ளு—பாடுவோம்
எந்த நாளு மிந்த பொங்கல் பொங்கல் என்றே
சுதந்திரக்—கதிர்—போற்றுவோம். (11)

ஆர்வமுடன் அம்மே! அம்மே என்று கூவிக்
கண்டிலோம்—தாயைக்—கண்டிலோம்
ஈரமிக வுடைக் காமதேனுத் தாயைக்
கார்ட்டினார்—தளை—பூட்டினார். (12)

மேலைக் கடலிடைச் சுதந்திரச் சூரியன்
இருக்குமோ! என்றும்—இருக்குமோ!
காலைக் கீழ்ப்பாரத நாட்டிடைத் தோன்றுவான்
காணுவோம்—பொங்கல்—போடுவோம். (13)

பொங்கல் பொங்கல் பொங்கல் பாரத நாட்டுடைப்
பொங்கலே—விடுதலைப்—பொங்கலே
பொங்கி பொங்கி ஆன்ம சக்தி வழிந்திட்
காலைகாள்—பொங்கி—யோங்குங்கள்! (14)

—"முருகு" அண்ணாமலை நகர்.

2

வாழி! வாழி! வளமொடு ஞான்றும்
வாழி ஆநந்த போதினி வாழி!
திங்கள் தோறும் எங்குந் தோன்றிப்
பொங்கும் மகிழ்வுடன் போதனை செய்யும்
நந்தா விளக்கே! நந்தமிழ்த் தாயே!
தீந்தமிழ்ச் சுவையே! தெளிநறுந் தேனே!

பள்ளிச் சிறுவர் பாவலர் நாவலர்
உள்ளங் கவரும் உயர்தமிழ்ப் புலவர்
புகழ்சேர் மாதர் பொருள்செய் வணிகர்
மகிழ்கலை வாணர் மாண்புட னிவர்கள்
அகமகிழ் கொள்ள ஆற்றும் பணியைச்
சகமுள் ளளவும் சாற்றுதற் கெளிதோ!
அதனால்,
பொங்குக மங்களம்! பொலிக! பொலிக!
எங்கும் 'பொங்கலோ பொங்கல்' என்றிசைக்கு
முயருறு மொலிபோ லோங்கிப்
பயன்பல பெற்று வாழிவா ழியவே!

—மு. ந. வேலாயுதம், தமிழாசிரியர், புதுவை.

3

பண்டிகையாம் பொங்கற் பண்டிகையாம்—இந்த
பழந்தமிழ் நாட்டுப் பண்டிகையாம்
எண்டிசையோர் புகழ் மன்னர்முதல் ஏழை
எளியவர் கொண்டாடும் பண்டிகையாம். (1)

ஆண்டிற் கொருமுறை பொங்க லண்ணே!—அதை
யாவரும் கொண்டாட வேண்டுமண்ணே
உண்டுகளித்து உறவினர் யாவரும்
ஒன்றாகக் கூடிடும் நாளிதண்ணே. (2)

மங்கலநாளிது பொங்கலண்ணே—இன்று
எங்கும் பொங்கும் வெல்லப் பொங்கலண்ணே
ஓங்கும் கலைபொருள் செல்வம் பெருகிட
உபகாரமாய் வந்த பொங்கலண்ணே. !4)

இன்பமாய் எல்லோரும் ஒன்றாக்கூடி—நல்
இன்னிசை கீதங்கள் பாடி, ஆடி,
அன்புடன் பல்விருந் துண்டு களிக்கவே
அவனியில் தோன்றிய பொங்க லண்ணே. (4)

நாட்டம் தழைக்கவும் நாட்டிருள் ஓடவும்
நாடியே வந்ததிப் பொங்கலண்ணே
தேட்டம் மிகுந்திட தேசம் செழித்திட
சீர்மையாய் வந்தநல் பொங்கலண்ணே. (5)

# அந்த வீடு வேண்டாம்

(ஏகை—சிவஞானம்)



**நா**ன் வசிக்கும் தெருவின் நடுவில் அமைந்திருந்தது நான் குடியிருக்கும் வீடு. அந்தத் தெருவிற்கு நான் குடி போய் ஆறுமாதகால மிருக்கும். ஆகையால், அந்தத் தெருவில் யாரும் அதிகம் பரிச்சய மில்லை. அண்டை அயலிலுள்ள இரண்டொருவர் தவிர எனக்கு யாரும் நண்பரார்க இல்லை. நான் இருந்த வரிசையில், எனது வீட்டுக்கு மூன்றாவது வீடு காலியாக விருந்தது. எனக்குத் தெரிந்த வரையில் அந்தத் தெருவிற்குக் குடி போன முதலாக, அவ்வீடு மூடியே கிடந்தது. அதற்கு முன்பாக எவ்வளவு நாட்களாக அம்மாதிரி இருக்கிறதோ தெரியாது. ஆயினும், இடையிடையே சிலர் அவ்வீட்டை, வந்து பார்த்துப் போவது வழக்கம். ஒருவரேனும் அவ்வீட்டுக்குக் குடி வந்ததாகக் காணும். முதலில் இது எனக்கு ஆச்சரியத்தை விளைவித்ததாயினும், நாளடைவில் இவ்விஷயம் எனக்குச் சகஜமாகவே தோன்றிற்று. அதற்குக் காரணம் யாது என்பதைப் பற்றியும் நான் சிந்தித்ததில்லை.

அன்று ஞாயிற்றுக் கிழமை. பகல் மணி ஒன்று இருக்கும். நான் சாப்பிட்டுத் தாம்பூலத்துடன் தெருத் திண்ணையின்மேல் வந்து அமர்ந்தேன். கோடைக்கால மாதலால், வெயில் தாங்க முடியவில்லை. நெருப்புக்காற்று வீச வாரம்பித்தது. உண்ட இளைப்பாலும், உள்ளே புழுக்கமாக இருந்ததாலும் நான் அவ்வெயிலைப் பொருட்படுத்தாது திண்ணையில் அமர்ந்திருந்தேன். சாலையில் ஜனங்களின் நடமாட்டம் அதிகமாகக் காணும். நடந்து செல்லும் ஓரிருவரும் அவ் வெயிலின் கடுமை தாங்காது கதிரவனைக் குறைகூறிய வண்ணம், தங்களது கால்கள் சுடுவதால் துள்ளிக் குதித்துச் சென்றனர். சாலையில் வார்க்கப் பெற்றிருந்த தார் சூரிய வெப்பத்தால் உருகி கால்களில் ஒட்டிக்கொள்ள அவர்கள் நடப்பதைப் பார்த்த பொழுது மிகவும் பரிதாபகரமாக இருந்தது. இவற்றைப் பார்த்துக் கொண்டே ஏதோ சிந்தனையில் ஆழ்ந்து கிடந்தேன். ஆனல், மனம் மாத்திரம் ஒரு வழியிலில்லை. சம்பந்தா சம்பந்தமின்றி ஏதேதோ பல விதமாக அலைந்து கொண் டிருந்தது. நிமிஷத்துக்கு நிமிஷம் பல சம்பவங்கள் தோன்றி மறைந்தன.

திடீரென்று என் முன்னே விநாயக முதலியார் தோன்றினர். சிந்தனை கலைந்து வந்தவரை உபசரித்துத் திண்ணையில் அமரச் செய்தேன். அவரது சர்வாங்கமும் வியர்வையால் நனைந்திருந்தது. வந்தவர் ஒரு பெருமூச்சுடன் தனது கைகுட்டையை எடுத்து முகத்தைத் துடைத்துக் கொண்டார்.

"என்ன வெயில் போங்கள், தாங்க முடியவில்லை!" என்றார் வந்தவர்.

"ஆம், வெளியில் தலை காட்ட முடிய வில்லை. நீங்கள் வெயிலைக்கூட பொருட் படுத்தாமல்..........."

"என்ன செய்வது? ஞாயிற்றுக் கிழமைகூட ஒழிவில்லை. குடும்பம் ஒன்று இருக்கிறதே! அதற்காக நடக்க வேண்டியதைக் கவனிக்க வேண்டியிருக்கிறது."

"என்ன விசேஷமோ?"

"ஒன்றுமில்லை; உம்மைக் காண வேண்டித்தான் வந்தேன். உம்மால் ஒரு காரியம் ஆக வேண்டும்."

அவர் முகத்தில் ஒரு புன்னகை தோன்றி மறைந்தது.

நானும் சிரித்த முகத்துடன், "ஆ! அதற்கென்ன என்னாலாக வேண்டியதைத் தடையின்றி செய்கிறேன்" என்றேன்.

"ஒன்றுமில்லை. இப்பொழுது குடியிருக்கிறேனே! அந்த வீடு இந்த மாதக் கடைசியில் காலி செய்தாக வேண்டும். அந்த வீட்டின் சொந்தக்காரருடைய பந்துக்கள் யாரோ, ரங்கூனிலிருந்து இங்கு வருகிறார்களாம்; அவர்களுக்காக அந்த வீட்டைக் காலி செய்து கொடுக்கும்படியும், என்னை வேறு வீடு பார்த்துக் கொள்ளும் படியும், வீட்டுக்காரர் 'கேட்டுக் கொண்டார். இதை ஒரு மாதத்துக்கு முன்னதாகவும் எனக்குத் தெரிவித் திருந்தார். இன்றுதான் ஒழிவு ஏற்பட்டது. உங்கள் தெருவில் ஏதாவது வீடு காலி யிருக்குமா வென்று அறிய உங்களைத் தேடி வந்தேன்" என்று சொன்னார் முதலியார்.

உடனே எனக்கு மூன்றாவது வீட்டின் ஞாபகம் வந்தது. அதைப்பற்றி அவரிடம் பிரஸ்தாபித்தேன். பிறகு அவ் வீட்டைப் பற்றி நாங்க ளிருவரும் பேசிக்கொண் டிருந்தோம். பேசிக்கொண்டிருக்கும் பொழுதே அடுத்த வீட்டிலிருக்கும் மாணிக்கம் பிள்ளை வந்தார். நானும் அவரைப் பார்த்து, "வாருங்கள் நல்ல சமயத்தில் வந்தீர்கள்" என்று சொல்லி வரவேற்றேன். அந்தத் தெருவில் மாணிக்கம் பிள்ளை ஒருவர்தான் எனக்கு நெருங்கிய நண்பர். அவரும் நானும் தினம் மாலையில் வெகுநேரம் பேசிக்கொண்டிருப்போம். அவர் ஒரு கர்நாடகப் பேர்வழி. ஆனால், மிகவும் நல்லவர். அந்தத் தெருவில் இருபது வருஷ காலமாக இருந்து வருகிறார். என்னை விட வயதில் முதிர்ந்தவர். ஆகையால் எனக்கு அவர் விஷயத்தில் மரியாதையுண்டு.

மாணிக்கம் பிள்ளையை வந்தவருக்கு அறிமுகப்படுத்தி வைத்தேன். அதன் பின், நான் மாணிக்கம் பிள்ளையை நோக்கி, "இவருக்கு ஒரு வீடு வேண்டுமாம், அவசரமாகப் பார்க்கச் சொல்லுகிறார்" என்றேன்.

அவர் ஒன்றும் பதில் கூறுமல் யோசனையில் ஆழ்ந்து விட டார். இவருடைய மௌனம் எனக்கு மிகுந்த ஆச்சரியத்தை உண்டு பண்ணியது. அதற்குக் காரணம் அவர் வீட்டுக்கு அடுத்த வீடு காலியாயிருப்பது அவருக்கு நன்ருகத் தெரிந்திருந் தும், ஏன்! இவ்வாறு மௌனம் சாதிக்கிருர்! என்றுதான். சற்று நேரம் சும்மாயிருந்த நான் அவரை நோக்கி, "என்ன பிள்ளைவாள் யோசனை செய்கிறீர்கள்? மூன்ருவது வீடு காலியா யிருக்கிறதே அது சௌகரியமா யிருக்காதா?" என்றேன்.

உடனே முதலியார் என்னைப் பார்த்து நகைத்தார்.

"இன்னுமா நீங்கள் அந்த வீட்டைப் பற்றித் தெரிந்து கொள்ள வில்லை! நீங்கள் இவ்விடத்துக்கு வந்து ஆறுமாத மாயிற்றே! காரண மில்லாமலா அது மூடிக் கிடக்கிறது?" என் ருர் பிள்ளை.

"எனக்கு ஒன்றும் தெரியாது. ஆயினும், அதைப்பற்றி உம் மைக் கேட்டுத் தெரிந்து கொள்ளலா மென்றிருந்தேன். மறந்தே போய் விட்டேன். சந்தர்ப்பமும் வாய்க்க வில்லை" என்றேன்.

பிறகு அவர் வந்தவரையும் என்னையும் நோக்கிப் பின் வரு மாறு கூறலானர்.

"அந்த வீடு மருதனூரில் இருந்த முனிசாமிக் கவுண்ட ருடையது. அவர் அவ்வூருக்கு ஜமீன்தாராக இருந்தார். ஜமீன் தார் என்ருல், சொல்லத்தான் வேண்டிய தில்லையே! செல் வந்தர்."

"இப்பொழுது இல்லையா அவர்?" என்று குறுக்கிட்டேன் நான்.

"இல்லை, நான் சொல்வது நடந்து பத்து வருஷங்களுக்கு மேலாயிற்று" என்று மேலே தொடங்கினர்.

"அந்த ஜமீன்தார் ஸ்திரீ லோலர். அவருக்கு அம்புஜம் என்ற வைப்பாட்டி ஒருத்தியிருந்தாள். இந்த வீடு அவளுக்கு ஜமீன்தா ரால் வாங்கிக் கொடுக்கப்பட்டது. அம்புஜம் மாநிறமா யிருந்தா லும் அழகாகவே யிருந்தாள். நல்ல கட்டமைந்த சரீரம். அவளு டைய சுருண்டு நீண்ட கூந்தலையும், வில்போன்று வளைந்து க்றுத்த புருவத்தையும் காணுவோர் யாருமே சற்று மயங்கித் தான் ஆகவேண்டும். இந்தத் தெருவில் அவளை உற்று நோக் காத ஆடவரில்லை என்னலாம். பணத்தின் மகிமையாலோ என் னமோ! ஜமீன்தாருக்கும் அவளுக்கும் நட்பு ஏற்பட்டுவிட்டது. ஜமீன்தார் வாரத்திற் கொருமுறை ஊரிலிருந்து இங்கு வருவார். வரும்பொழுது, பழங்களும், மிட்டாய் தினுசும் பூ முதலியவை களும் வாங்கிக்கொண்டு வண்டியில் வந்து இறங்குவார். இரண்டு மூன்று நாட்கள் அவள் வீட்டில் இருந்துவிட்டு மறுபடியும் ஊருக் குப் போய்விடுவார். வெகுநாட்களாக இம்மாதிரி நடந்துவந்தது.

அவளுக்கு அவரிடத்தில் காதல் உண்டோ இல்லையோ—அவருக்கும் அவள் விஷயத்தில் நம்பிக்கைதானோ, இவை எனக்குத் தெரியாது.''

ஒரு நாள் வழக்கம்போல் கவுண்டர் ஊரிலிருந்து வந்து அவ் வீட்டண்டை யிறங்கினர். வந்தவர் கதவண்டை சென்று கதவைத் தட்டியபோது, உள்ளேயிருந்து யாரோ பின் பக்கம் ஓடியதாக அவருக்குச் சப்தங் கேட்டது. சிறிது நேரத்திற்கெல்லாம் கதவும் திறக்கப்பட்டது. கவுண்டர் பேசாமல் உள்ளே நுழைந்தார். நடையில் ஏதோ இரண்டு செருப்புகள் இருந்தன. அவற்றை அவரது கண்கள் கூர்ந்து கவனித்தன. இருந்தும், ஏதுமறியாதவர்போல உள்ளே சென்று சோபாவில் அமர்ந்தார். பின்னர் அம்புஜமும் ஜமீன்தாரும் வழக்கம்போல் அளவளாவிப் பழகினர். இரவு போஜனம் உண்ட பிறகு இருவரும் படுக்கைக்குச் சென்றனர். அம்புஜம் அயர்ந்து நித்திரை போய்விட்டாள். ஜமீன்தார் தூங்கினரோ என்னமோ தெரியாது. இரவு இரண்டு மணி இருக்கும். "ஐயையோ! அட பாவி!'' என்று இரண்டு குரல் எழுந்தன. உடனே அவை அடங்கிற்று. மறுபடியும் சப்தத்தைக் காணோம்.

"ஆமாம்; இவை உமக்கு எப்படித் தெரியும்?'' என்று கேட்டேன்.

"நான் தான் பக்கத்து வீட்டி லிருக்கிறேனே'' என்று மேலும் பேசத் தொடங்கினர் பிள்ளைவாள்.

"பொழுது விடிந்தது, விஷயத்தை யறியலாம் என்று எழுந்து பக்கத்து வீட்டண்டை சென்றேன். வீடு திறந்து கிடந்தது. பேச்சுக் குரல் ஒன்றும் கேட்கவில்லை. வெகு நேரம் காத்திருந்தும் ஒன்றும் புலப்படவில்லை. வழக்கம்போல் தெருவில் சாணந் தெளிக்கும் வேலைக்காரி வந்தாள். அவள் நேரே உள்ளேசென்று சற்று நேரத்துக்கெல்லாம் பயங்கரக் கூச்சலுடன் திரும்பி வெளியே வந்தாள். அவளது உடல் நடுங்கிற்று. "எஜமாட்டி யம்மா கீழே கெடக்கிறுங்க, தலை மயிரெல்லாம் விரிஞ்சி கெடக்குது; கண்ணு முழிரெண்டும் வெளியே வந்துட்டுது பயமாயிருக்குது'' என்று உளறிக்கொண்டே கத்தினள். எனக்கு விஷயம் புரிந்துவிட்டது. கொலை நடந்திருக்கிறது என்று யூகித்துக்கொண்டேன்.

நான் மறுபடியும் "ஆமாம்; நீங்கள் ஏன்! முந்தின இரவே சென்று காப்பாற்றியிருக்கக் கூடாது?'' என்று கேட்டேன்.

"நான் முதலில் அவளை அவர் கொலை செய்வதாக நினைக்கவில்லை. அன்று மாலை நடந்த கலவரத்தின் பயனக் அடித்து துன்புறுத்துகிறர் என்று எண்ணினேன். அன்றியும் அந்தக் குரல் அப்புறம் கேட்கவும் இல்லை. அம்புஜம் அன்றிரவு தூங்கிக்கொண்டிருந்தபொழுது அந்த மனுஷன் அவளது மென்னி

யைப் பிடித்து அழுத்தி கொன்றுவிட்டிருக்கிறான். பொழுது விடிவதற்குள் அவனும் வெளியேறிவிட்டான். பின்னர் போலீஸ் விசாரணை நடந்தது. போலீஸார் ஜமீன்தாரையும் கைது செய்தனர். ஜமீன்தார் அன்று முதல் ஏதோ பிரம்மஹத்தி பிடித்தவர் போல பிதற்றிக்கொண்டிருந்தார். கோர்ட்டில் அவரை விசாரித்த போது அவர் ஒன்றும் தகுதியாகப் பதில் சொல்லவுமில்லை. நீதிபதியும் அவருக்கு ஒன்றும் தண்டனை விதிக்கவுமில்லை. ஆனால் அவர் பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போகப்பட்டார். அவ்வளவுதான். அது முதற்கொண்டு அந்த வீடு மூடிக்கிடக்கிறது.''

"அதற்காக வீடு மூடிக் கிடப்பானேன்! வேறு யாராகிலும் குடியிருக்கலாமே'' என்று என் அபிப்பிராயத்தைத் தெரிவித்தேன்.

"அதைத்தான் சொல்ல வந்தேன். அதற்குள் அவசரப்படுகிறீர்களே. அது நடந்து சில நாட்களுக்குப் பின்னர் பலர் அந்த வீட்டில் குடியிருந்து போயினர். ஆனால், ஒருவரேனும் ஒரு மாதங்கூடச் சரியாக இருந்ததில்லை. நான் அவர்களைக் காரணங் கேட்டதுண்டு. அதற்கு அவர்கள், நள்ளிரவில், தினந்தோறும் ஏதோ ஒரு கூச்சல் கிளம்புகிறதாம். அது, 'அடபாவி! ஐயையோ! உயிர்போகிறதே!' என்று இவ்வாறெல்லாம் அலறுவதைப்போல் இருக்கிறதாம். அதுவுமன்றி அவ்வீட்டில் வந்தவர்கள் எல்லாம் அடிக்கடி நோய்வாய்ப் படுகின்றனராம். ஆகவே, அவ்வீட்டில் இருக்க யாரும் பயப்படுகிறார்கள். எனக்குக்கூடச் சில சமயங்களில் அக்குரல் கேட்பதுண்டு'' என்று சொல்லி முடித்தார் மாணிக்கம் பிள்ளை.

எனக்கு இவர் கூறியவற்றில் முதல் பாகம் நம்பிக்கையைக் கொடுத்தது. ஆனால், அம்புஜம் பேய் வடிவங் கொண்டு அலறுகிறாள் என்பது மட்டும் என்னால் நம்ப முடியவில்லை. இருந்தாலும், பல நாட்களாக அவ் வீட்டைப்பற்றி யிருந்த சந்தேகம் அன்றோடே தீர்ந்தது. அது குறித்து ஆறுதல் அடைந்தேன். இவ்விஷயங்களனைத்தையும் கேட்டுக் கொண்டிருந்த விநாயக முதலியார் பிரமித்துப்போய், "சிவ சிவ'' என்று காதைப் பொத்திக் கொண்டு, "ஐயா, அந்த வீடு வேண்டாம்'' என்று சொல்லிக் கொண்டே எழுந்து நடந்தார்.



# பல்கலைப் பேரகராதி

(மு. த. வேலாயுதம்.)



பிரான்சு தேசத்தில் 18-ம் நூற்றுண்டில் 15-வது லூய் அரசன் அரசாட்சி செய்து வந்தான். இவன் அரசாட்சி பணக்காரர்களுக்குச் சாதகமாயிருந்ததே யொழிய, பொது மக்களுக்குரிய அரசாட்சியாய் விளங்கவில்லை. அரசன் இன்பத்தில் மூழ்கி அளவுக்கு மிஞ்சி கடன்பட்டு வாழ்ந்து வந்தான். இதனால் வருமானத்தைப் பார்க்கினும் செலவு அதிகப் பட்டதால் அவன் தன் அரசாட்சியில் அல்லலுற்றனர் மக்கள். இதனுக்குத்தான் வள்ளுவனார்.

'ஆகாறுஅள விட்டிதாயினுங் கேடில்லை
போகாறு அகலாக் கடை'

என்று கூறிவைத்தனரோ என்று நினைக்கவேண்டியதாய் விட்டது.

வெர்சாய் மலர்வன மாளிகையில். ஒரு நாள் 15-வது லூய் அரசன் தன் நண்பர்களுடன் ஒய்யாரமாகப் பேசிக் கொண்டிருந்தான். முதலில் வேட்டையாடுவதைப்பற்றிப் பேச்சு நிகழ்ந்து, இறுதியில் படிப்படியாக வெடி மருந்தைப்பற்றிப் பேச்சு சென்று விட்டது. இப்பேச்சில் எல்லோருங் கலந்து கொண்டனர். இவர்களுள் ஒருவர் 'வெடியுப்பு, கெந்தகம், கரி இவைகளைச் சமமாகக் கொண்டு நல்ல வெடி மருந்து செய்யலாம்' என்றார். அப்போது பிரான்சு தேசத்தில் பீரங்கிப் படையைச் சீர்படுத்தி வைத்த சேனுபதி வல்லியேர் என்பார் நல்ல மருந்து செய்வதற்குக் கெந்தகம் ஒரு பாகமும், கரியொரு பாகமும், நன்றாய்ப் பண்படுத்திய வெடியுப்பு ஐந்து பாகமும் சேர்க்க வேண்டும்' என்றுரைத்தார். நிவானுவர் என்னுஞ் செல்வர், 'நாம் தினமும் காடை முதலிய பறவைகளை வெர்சாய் மலர் வனத்திற் கொன்று குவிக்கின்றோம்; இன்னும் சில சமயம் மனிதர்களையும் அதனால் உயிர் போக்குகின்றோம் ; அல்லது அம்மருந்தைக் கொண்டே பகைவர் நம்மையுங் கொல்கின்றனர். ஆனால், இவ்வாறு உதவும் வெடி மருந்து எவ்வாறு செயப்படுகிற தென்பதைத் தெரிந்துகொண்டோமில்லை' என்றார். இதைக் கேட்ட போம்பதூர் சீமாட்டி, 'ஆமாம், இவ்வுலகத்திலுள்ள எல்லாப் பொருள்களைப் பற்றியுமே ஒன்றுந் தெரிந்து கொள்ள முடியவில்லை. நான் என் உதட்டில் பூசிக் கொண்டிருக்கும் சிவப்பு எதனால் செய்யப்பட்டது என்று தெரியவில்லை. இன்னும் நான் போட்டுக் கொண்டிருக்கும் பட்டு கை மேற்சோடு எப்படிச் செய்யப்பட்டதென்று என்னை யாராவது கேட்டால் எனக்குப் பதிலளிக்கப் பெருந் திண்டாட்டமாகி விடுகிறது' என்றாள்.

பின், வல்லியேர் என்னும் சேனாபதி அரசனைப் பார்த்து, அரசே! தாங்கள், பல்கலைப் பேரகராதியைப் பறி முதல் செய்தது மிகவும் வருந்தத்தக்கதாகும். அவ்வகராதியை யெழுதி முடிக்க எங்களோவ்வொருவருக்கும் 100 பொன் நாணயம் ஆயிற்று. இப்போது நடைபெற்ற வாதங்களுக்கெல்லாம், அந்தப் பேரகராதியில் விடையுண்டு. அதில் நாம் காணலாம்' என்று கூறினர்.

இதைக் கேட்ட லூய் அரசன், அங்ஙனம் எல்லா வாதங்களுக்கும் பதிலிறுக்கக் கூடியதா அந்நூல் என்பதைச் சோதித்துப் பார்த்தற்குச் சிற்றுண்டிக்குப் பின் நூலைக் கொணருமாறு கட்டளையிட்டான். மூன்று பணியாளர் மிகவும் சிரமத்துடன் ஒவ்வொருவரும் எவ்வேழு புத்தகங்களைக் கொண்டு வந்தனர்.

அப்போது வெடி மருந்து என்ற வார்த்தையைப் பேரகராதியிற் பார்த்தனர். சேனாபதி வல்லியேர் தாம் அனுபவத்திற் கண்டதைக் கூறியவாறே விளக்கப்பட்டிருந்தது. உடனே பேர்ம் பதூர் சீமாட்டி ஸ்பெயின் நாட்டில், மத்ரீத் (Madrid) தில் உள்ள பெண்கள் தங்கள் கன்னங்களுக்குத் தடவி வந்த பழைய சிவப்பிற்கும் பாரிஸ் பெண்கள் தடவி வந்த சிவப்பிற்குமுள்ள மாற்றத்தை உணர்ந்தனள். இன்னும் கிரேக்கப் பெண்களும் உரோமப் பெண்களும் ஓர்வித கிளிஞ்சிலினின்று கசியும் சாயத்தைத் தடவி வந்தனர் என்றும் ஆதலால், பிரான்சு தேச மக்கள் தடவி வந்த சிவப்பு முன்னோர்கள் உபயோகப்படுத்தப் பட்டதென்றும், ஸ்பெயின் தேசத்தில் தடவிக் கொள்வதில் மஞ்சள் கலப்புடையதென்றும், பிரான்சு தேசத்தில் தடவிக் கொள்வது பீதாம்பர வண்ணப் பூச்சியிலிருந்து வரும் சிவப்பென்றுங் கண்டாள்.

இன்னும், மேல் சோடு எவ்விதம் செய்யப்படுகிறதென்றும், அதை எவ்விதமான இயந்திரத்தி னுதவியால் ஆக்கப்படுகிறதென்றும் விளக்கமாய்க் கூறக் கண்டாள். அவள் மிகவும் பேராச்சரியமுற்று, "அரசே! இது எத்தகைய உயர்ந்த நூல்! என்னரசேர்ங்க இந்நூலொன்றே போதும்" எனத் துணிவுடன் கூறினள்.

இந்தப் புத்தகத்தி னுயர்வைக் கண்ட ஒவ்வொருவரும் போற்றினர். அத்துடனில்லாது தாங்கள் தேடும் பதத்திற்கு அப்பொழுதே தக்க முடிவு கண்டு கொள்கின்றார்களாதலால் எல்லோரும் அப்புத்தகத்தைப் போட்டியிட்டு வாசித்துத் தெரிந்து கொள்ள விரும்பினர். வழக்குரைப்போர் தங்களுக்கேற்ற முடிவுகளிருத்தலைக் கண்டனர். அரசன் தன் முடியரசின் உரிமைகளியாவையுங் கண்டான். அப்போது அரசன் வியப்புடையவனாய், 'ஏன் இந்நூலைப் பழித்துக் கூறினர்?' என்றான். அதற்கு நிவர்னுவா என்னுஞ் செல்வர் இது எல்லாப் புத்தகத்தினும் உயர்ந்து விள்ங்குவதால் தான் அவ்வாறு இழித்துக் கூறினர். தகுதியற்ற நூலையும், எதிலும் ஒவ்வாத நூலையும் உலகத்தி

விக்ழார்கள். பெண்கள், புதியவ்ளொருத்தி வந்தால், அவளைப்பற்றி யிழித்துக் கூறுவது. ஏனென்றால், வந்தவளின் அழகு இவர்களைப் பார்க்கிலும் மிக்கிருப்பதால் தான்' என்று பகர்ந்தனர்.

இவ்வாறே இன்னும் பல மொழிகளை அப்பேரகராதியிற் கண்டனர். ஓர் பிரபு, புத்தகத்தின் ஏட்டை ஒருவாறு புரட்டிப் பார்த்தபின் மகிழ்வுடன் மன்னனைப் பார்த்துக் கூறியதாவது, 'அரசே! உங்கள் அரசாட்சியில் பற்பல கலைகளையுந் தெரிந்து கொள்வதற்கும், தேசத்தில் செழிப்பு நிலவுதற்கும் மனிதர்கள் திறமுடையவர்களாய்க் காணப்படுகின்றனர். இவ்விதம் காணப் படுதலை நோக்க நீங்கள் பெரும்பேறு பெற்றவராவீர்கள். இந் நூலில் ஓர் குண்டூசி செய்யும் விதத்தைக் கூறுவது முதல், இரும்பை உருக்கி வெடி குண்டுகள் செய்யும் வரையிற் கூறப் பட்டிருக்கிறது. மிகச் சிறிய பொருளிலிருந்து மிகப் பெரிய பொருள் வரையில் கூறப்பட்டிருக்கிறது. உங்களாட்சியில், இவ் வுலகத்திற்குப் பெருந் தொண்டாற்றிய புலவர்கள் இத்தகைய அரும் பெரும் நூலைத் தோற்றுவித்தற்கு இறைவனுக்கு நன்றி கூறுங்கள். பிற நாட்டினரும் இதை வாங்குதல் வேண்டும் அல்லது அவர்கள் இதைப் பின்பற்றி ஓர் நூல் எழுதி வெளி யிடல் வேண்டும். தாங்கள் விழைவுற்றால் என்னுடைய எல்லாப் பொருள்களையும் எடுத்துக் கொள்ளுங்கள்; ஆனால், இப்பேரகராதி யை மாத்திரம் என்னிடம் தந்து விடுங்கள்' என இவ்வாறு கூறினார்.

இதைக் கேட்ட அரசன், 'இத்தகைய உயர்ந்த நூலில் பிழை கள் மலிந்துள்ளனவென்று கூறுகின்றார்களே' என்றான். அதற்கு அப்பிரபு, 'அரசே தங்கள் உணவில், இரண்டு பதார்த்தங்கள் கெட்டுவிட்டன என்று வைத்துக் கொள்வோம். இதற்காக உணவை நாம் சாப்பிடவில்லையா? கெட்ட இரண்டு பதார்த்தத் திற்காக எல்லா உணவையும் தெருவில் எறிந்துவிட உங்கள் மனது சம்மதிக்குமோ?' என்றான். அரசன் நீதி யுணர்ந்தான். எல்லோரும் அப்பேரகராதியை உபயோகிக்கத் தொடங்கினர். இறுதியில் என்ன ஏற்பட்டது? இந்நூலைப் பிற நாட்டினரும் நான்கு முறை அச்சியயற்றி வந்தனர். இதனால் ஏறக்குறைய 18 லட்சம் எக்குய் லாபங் கிடைத்ததாம். இதுவே பிரான்சு மொழியில் ஏற்பட்ட பல்கலைப் போகராதி பரவியதன் காரண மாகும்.

---

குறிப்பு:—வொல்தேர் (voltaire) என்னும் புலவருக்கு XV-வது லூய் அரச னின் பணியாள ஒருவனால் கூறப்பட்டதென்று அவர் எழுதி யது.

# விஞ்ஞானம் விரைதல்

(டி. பி. நவநீத கிருஷ்ணன், M. A.)



(சென்ற இதழின் தொடர்ச்சி.)

**க**ற்களை உருக்கி, உலோகங்களை அடைதல் என்பதான தொழிலை முறையே யாற்றற் கென தேர்ந்த அறிவும், அதற்கேற்றதான வினை செய் வகையான திறமையும் வேண்டும். ஆதலின் அத் தொழிலி லீடுபட்ட வினைஞருக்கும் கூட, அது, பிரமையை விளைவிப்பது. எனவே, மற்றவர் அதைப் பெரும் அதிசயமாய்க் கண்டனர் எனச் சொல்லவே வேண்டிய தில்லை. அவர்களுக்கு அது மாந்தரீகமாகவே தோன்றியது. உலோகக் கற்களை உருக்குத லொன்றுன தொழிலும் மந்திரத் தின் மயக்கத்தை மக்களிடைப் பெருக்கிற்று.

தணலி னின்று உலோகங்கள் வெளிப்பட்டன. உலோக காலம் தொடங்கியது. அக் காலத்தின் முற் பகுதியில் செம்பே முக்கியமா யிருந்தது. ஆனால், சிறிது காலத்திற் குள்ளாகவே, செம்புடன் வெள்ளீயத்தையும் சேர்த்து உருக்குவதால் கிடைப்ப தான வெண்கலம் கண்டு பிடிக்கப்பட்டது. வெண்கலம் செம்பை விட உறுதியா யிருந்தது. கருவிகள் செய்ய அதுவே பயன் படலாயிற்று. ஆதலின் உலோக காலத்தின் முற்பகுதி, வெண் கலக் காலம் எனப்படுகின்றது. வெண்கலக் காலம், சுமாராக கி. மு. 5000ம் ஆண்டினின்று கி. மு. 2000-ம் ஆண்டு வரை யிருந்த காலப் பகுதி.

செம்பு, கல்லைவிட உர மிக்கதானது. அதைக் கொண்டு கல்லாலானவை தரிப்பதைவிட அதிகமான காலம் நீடித்துத் தரிக்கும் கருவிகளை யாக்கலாம். செம்பை உருக்கி வார்க்கலாம்; கல்லை அவ்வாறு செய்ய இயலாது. இவ்வகையின் காரணங்களை முன்னிட்டு, கருவிகளைச் செய்ய செம்பே கற்களைவிடச் செம்மை யானது, என அறியலாம்: கற்கோடரி சீக்கிரத்தில் மழுங்கிவிடும். அதை, அடிக்கடி சாணை பிடிக்க முடியாது. ஏனெனில், சாணைக்கு சாணை, அது தேய்வதால், அதன் அளவு குறைந்து வரும், சிறிது காலத்திற் குள்ளேயே பயனற்றதாய் விடும். அதன் பின் அதைத் தூக்கி யெறிந்துவிட வேண்டியதே. நுனை மழுங்கின செப்புக் கோடரியை மேலும் மேலும் பன்முறை வார்த்துப் பயன் படுத்தலாம்.

உலோகங்களை வார்த்து உருவாக்கும் தொழிலும், பாண்டங் கள் செய்யப்படும் தொழில் செய்ததைப் போலவே, மக்களது படைப்பின்பாற்பட்ட கற்பனையை மேலும் மூட்டியது. கற் கருவி யைச் செய்கிறவன், தன் வேலையைத் தொடங்கியபோது, தான்

எடுத்த கல்லால் கட்டுப்பட்டவன். வேறெதனையும் அதனுடன் ஒட்ட இயலாதவன். அவனுடைய வேலை, ஆங்காங்கே செதுக்கி, சிறு துண்டுகளைப் பெயர்த் தெடுத்துவிடுகின்ற வகையானது. அவன் தன் கடனாற்றும் வகை, குறைவண்ணமானதா யுள்ளது; நிறைவண்ண மானதா யில்லை. குயவரும், உலோகத் தொழில் வினைஞரும், முதலில் எடுத்த பொருளைக் குறைக்காதும், வேண்டும் போது வேறு பொருள்களைச் சேர்த்தும், தம் பணிசெய்து நிறைவேற்றுகின்றனர். அவர்கள் அதை, நிறை வண்ணமான ஆக்கும் வகையில் செய்கின்றனர். அப்பொழுது, படைப்பியலான செய்கைகளால் ஏற்படும் உயர் வகையான மன வெழுச்சியைப் பெறுகின்றனர்.

'உலோகக் கற்களை உருக்கு மியலான தொழில்' (மெடலர்ஜி) கண்டு பிடிக்கப்பட்டமையின், செம்பைக் கொண்ட கனியியல் கற்களைப் பெற வேண்டியதாயிற்று. அத் தேவையால் தூண்டப்பட்டு, மக்கள், அக் கற்களைத் தேடித் திரியும் வேலையில் முனைந்தனர். செம்பைக் கொண்ட கற்கள் சொற்பமானவை. அவையும் எளிதில் அகப்படுவதில்லை. அவற்றைப் பெறவேண்டும் என்ற எண்ணத்தால் தூண்டப்பட்டவர்கள், பல்வேறு வகையான பண்டங்களையும் கண்டு பிடிக்க நேரிட்டது. இதனால், நிலநூல் (ஜியாலஜி), தரை நூல் (ஜியாக்ரபி), இயற்கை நூல் (நேசுரல் சயன்ஸ்) என்றவற்றின் பாற்பட்ட அறிவும் பெருக்க மடைந்தது; பொன், வெள்ளி, தகரம் என்றவற்றைக் கொண்ட கற்களும் அகப்பட்டன. உலோகங்களை வார்த்தற்கான வினைசெய் வகைகள் வளர்ச்சி யுற்றமையின், உருக்குத் தட்டாரத் தொழிலில் கைதேர்ந்த வினைஞரும், அறிஞரும் ஏற்பட்டனர். உலோகம் வார்க்கும் போது, உருக்கப்பட்ட உலோகங்களில், காற்றிலுள்ள ஆக்ஸிஜன் என்ற வாயு அடையாதவாறு தடுக்கப்பட வேண்டும். வார்ப்பில் காற்றுக் குமிழ்கள் ஏற்படாதவாறு பார்த்துக் கொள்ளல் அவசியம். அதிகமான வெப்ப நிலையில், நிலை குலையாத வார்ப்பு அச்சுக்களைச் செய்தற் கென்றான முறைகளைக் கண்டு பிடித்தலே, சிறந்த தொழிற் கலைகளி லொன்றாம். செம்பு, 1200°C ஆன வெப்ப நிலையில் உருகுகின்றது. அதற்கான சூட்டைப் பெற, சுடுங்காற்று வீச்சுக் குட்பட்ட தணல் இருக்கவேண்டி யுள்ளது. அதனால், சிறந்த வகையான அடுப்புக்களின் தேவை யேற்படுகின்றது. அவ் அடுப்புக்களைக் கட்டுதற்கான தொழின் முறையும் சிறந்த தொன்று. அக் காலத் திருந்த மக்கள், புதுக் கற்காலத்தி னின்று வெளிப்பட்டவராகி, உலோக காலத்தினுள் நுழைந்து கொண் டிருந்தனர் எனலாம். அவ்வாறு அவர்கள் சென்ற வழியில், நாம் மேலே குறிப்பிட்ட வகைகளில் ஏற்பட்ட தொழின் முறையிலான இடையூறுகள் பல குறுக்கிட்டன எனலாம். அவ் விடையூறுகளை அவர்கள், கடந்தவராகி எதிர்ப்பட்ட இன்னல்களை மேற்கொண்டு, வெற்றி பெற்றதே, அவர்கள் ஆற்றிய அரும் பெரும் விஞ்ஞானச் செயலாம்.

கிட்டக் கிழக்கு நாடுகளி லிருந்த செப்புக் கற்கள் விரைவி னில் உபயோகிக்கப் பட்டுவிட்டன. செம்பு, கந்தகத்துடன் இயை வதால் ஏற்படுகின்ற செப்புக் கந்தகக் கற்களே (பிரைடிஸ்), சாதாரணமாகக் கிடைப்பவையான செப்புக் கற்கள். செப்புக் கந்தகக்கல் காற்று வெளியான இடத்தில் வைக்கப்பட்டால், அதன்மீது காற்று பட்டுக்கொண்டே யிருக்கும். அதனால், செப் புக் கந்தகக் கல் சிறிது சிறிதாய் செப்பு ஆக்ஸைடாய் மாறும். பூமியின் மேற் பரப்புக் கருகிலுள்ள படலங்களின் செப்புக் கந்தகக் கற்கள், இவ்வழியே, செப்பு ஆக்ஸைடாய் மாறுகின்றன. செப்பு ஆக்ஸைட், கட்டைக் கரியுடன் சேர்க்கப் பட்டு, சூடேற்றப்பட்டால், தனியான உலோகச் செம்பு பெறப் படும். பூமியின் மேற் பரப்பிலும், அதற்குச் சற்றுக் கீழேயுமுள்ள படலங்களி னின்று கிடைக்கின்ற செப்பு ஆக்ஸைடினின்று மேற் கூறிய வகையில், செம்பைப் பெறவாம். ஆனால் மேற்புறமா யுள்ள படலங்களி னின்று எடுக்கப்பட்ட செப்பு ஆக்ஸைட் செல வான பின், பூமியின் கீழே ஆழமான இடங்களிலுள்ள படலங் களுக்குச் சென்றே செப்புக் கற்களைப் பெறலாம். அப் படலங்களி லுள்ள கற்கள், காற்று படாதவையானமையின், செப்புக்கந்தகத் தக்டுவாலானவை. அவற்றினின்று செம்பை அடைதல் கடினம். பூமியின் கீழிருந்து எடுக்கப்பட்ட செப்புக் கந்தகக் கற்களை, மேற் பரப்பிற்குக் கொணர்ந்தபின் அவற்றைக் காற்றுத் திறப்பாய்ச் சில நாட்கள் வைத்துக் காப்பாற்றும்படி செய்து, செப்பு ஆக் ஸைடாக்கிய பின், செம்பைப் பெறலாம்.

உலோகங் கொண்ட கற்களைத் தேடி, பூமிக்குக் கீழே செல்ல வேண்டியதாயிற்று. அதனால் சுரங்கங்கள் அல்லது கனிகள் வெட்டுதல் என்ற புது வகையான தொழின்முறை நிலைநாட்டப் படுகின்றது; கனியியல் தொழின் முறை (மினராலஜி) தொடக்க மாயிற்று. அத்தொழிற் கலையில், கெட்டியான பாறைகளைத் துளையிடவும்—பிளக்கவும் ஆனதற்கான வழிகளும்,—குடைந்து வெட்டப்பட்ட சுரங்கங்களின் பக்கவாட்டங்கள் இடிந்து விழாம லிருப்பதற்கென்றுள கட்டிட யியலான அறிவும்—கனிகளில் காற்றோட்டம் ஏற்படுத்துவதற்கான வழிகளும்—இன்னோரன்ன பலவும் அவசியமாகின்றன. இங்ஙனம், பல புதுவிதமான வினைசெய் வகைகளைக் கொண்டதான புதுத்தொழிற் கலை பிறந் தது. தொழிற் கலைகளிற் சிறந்த மக்கள் சமுதாயங்கள் வாழ்ந்து வந்தனவான நாடுகள், உலோகக் கற்கள் வாய்த்தவற்றின் அரு கில் இல்லாது, அதிக தூரங்களில் இருக்க நேரிட்டது. மேலும் கனிகள் தோண்டப்பட்ட இடங்களின் அண்மையில், மரக்கட்டை கள் பெறும் வசதிகள் ஏற்படவில்லை. ஆதலின், கிடைத்த கனிப் பொருள்களை ஆங்கே உருக்கி யெடுப்பதற்கான சூட்டைப்பெறும் வழிகள் ஏற்படவில்லை. கனிப்பொருள்கள் பயன்படுபவையாவ தற்கு, கனியியல் கலைமட்டும் போதாததாயிற்று. வேறு பல தொழின் முறைகளின் தேவை யேற்பட்டது. எனவே, வேறு பல தொழிற் றுறைகளுக்கும் வழிகள் பிறந்தன. ஓரிடமிருந்து

மற்றோரிடத்திற்கு நடந்து செல்லும் முறைமட்டும் போதாததா யிற்று. துரிதமானவையும், வசதியானவையும், ஆன பிரயாணஞ் செல்லும் வழிகளில் முன்னேற்றம் ஏற்பட வேண்டியதாயிற்று. ஓரிடமிருந்து மற்றோரிடம் பண்டங்களை பெருவாரியாய் அனுப்பு தற்கென சுமை தூக்கி நடந்து செல்லும் முறைமட்டும் போதாது. பண்டங்களைப் பெருவாரியாய் விரைவினில் அனுப்புதற்கேற்ற தொழின் முறைகளும் விளைய வேண்டியதாயிற்று. பண்டங்களை யேற்றிச் செலுத்தும் வகைகளிலும் திருத்திய பெருக்கம் ஏற்படு கின்றது. இவற்றால் மக்கள் போக்கு வரத்து வழிகளிலும், பண் டங்களின் ஏற்றுமதி—இறக்குமதிக்கான போக்கு வரத்து சாத னங்களிலும், திருந்திய முன்னேற்ற மேற்பட இடமுள்ளது. வண்டிகள்—வாகனங்கள்—சாலைகள்—மரக்கலங்கள் இன்னோரன்ன வற்றின்பாற்பட்ட தொழிற் கலைகள் உண்டாகின்றன. எனவே, ஒரு தொழிலின் தேர்ச்சி, பல தொழில்களை விளைவிக்கின்றது என்பதான விஞ்ஞானீய வழியாய்ப் பெருக்கம் ஏற்படுகின்றது.

புதுக் கற்காலம் மறைந்து, உலோக காலம் பிறந்த பின், மக்கள் வாழ்க்கையில் அநேக பெரும் வகையான மாறுதல்கள் ஏற் பட்டன. தொழின் முறைகள் பலவாய் மிகுந்து சிறப்புற்றன. விஞ்ஞான வியலான அறிவும் தேர்வுற்றது. ஆனால், அக்காலத் தே, மந்திரவியலும வலிவுற்றது. மந்திரவியல் பரவியமையின் தொழிற் சிறப்பாலும், விஞ்ஞானப் பெருக்கத்தாலும் பெறப் பட்ட விளைவுகள், எல்லோர்க்கும் பயனீந்து, மக்கள் வாழ்க்கை யையே பொதுவாய்ச் சிறப்புறச் செய்தற்கென்றான வழி, தடைப் படுதற்கான பிரமேயம் ஏற்பட்டது. அரும்பெரும் தொழிற் கலை களே கற்பனையியல் சிறத்தற்குக் காரணமாயின. அத்தொழின் முறைகளைக் கண்டதால் விளைவிக்கப்பட்ட 'ஆக்கல்' (அல்லது 'படைத்தல்') உணர்ச்சியால் எழுந்த கற்பனை சிறந்த விளைவியல் களுக்குக் காரணமாயிற்று. ஏனெனில், அவ்வகைக் கற்பனை யெழுப்பிய சிந்தனையின் விளைவாய் மேலும் மேலும் பல தொழில் முறைகள் தோன்றலாயின. இது 'ஆக்கல்' எனும் உயர்வகை யான கற்பனையியல். அதனின்று விஞ்ஞானம் பிறந்தது. சிறந்த தொழில் முறைகளைக் கண்டதால் மற்றோர் வகையான கற்பனை யும் மூண்டது. அது, 'அதிசயத்தை' மட்டும் கண்டதால் ஏற் பட்ட அச்சத்தின் பாற்பட்டது; புதுச் சக்திக்கு முன் தலை வணங்கும் உணர்ச்சியைத் தருவது. அவ்வகைக் கற்பனையால் ஆக்கமொன்றும் விளையாது. எனவே, அது வீணான கீழ்த்தர மான கற்பனையியல். அதினின்று பிறந்தது, மந்திர வியலே. ஆயினும், காலப்போக்கில், விஞ்ஞானமும், தொழிலும் மந்திரத் திற் குட்பட்டன. மந்திரவாதிகளதும், அவர்களைப் பாராட்டிப் போற்றியவர்களதும் கைகளில் உலகம் சிக்கிற்று. பேதைமை யும்—வஞ்சகமும்—தந்திரமும்—விளம்பரமும், இன்னோரன்னவற் றை மூலமாய்க் கொண்ட மந்திரம், அறிவையும்—நேர்மையையும் தொழிற் சிறப்பையும்—அடக்கத்தையும் இன்னோரன்னவற்றை யும் மூலமாய்க் கொண்ட விஞ்ஞானத்தை அடக்கிற்று. மந்திரத்

தின் துணை கொண்டே, கட்டுப்பாட்டுக் குட்படாது தனியரசு செலுத்தி வந்த மன்னர் அன்று எழுந்தனர். மந்திர மொழிகளைக் கொண்டே, சர்வாதிகாரிகள் இன்று எழுந்துள்ளனர். பல்லாயிர மாண்டுகள் இடைப்பட்டிருப்பினும், இவ்விரு ஆட்சிகளிலும், பகுத்தறிவும், விஞ்ஞானமும், தொழிலும் குற்றேவல் புரியவேண்டிய நிலைமையே யேற்பட்டது. பழங்காலத்து மந்திரவாதிகளின் முறையைப் பின்பற்றியே, இன்றும், பல நாடுகளின் ஆட்சி முறையுள்ளது. சர்வாதிகார நாடுகளில், மந்திர அதிகாரம் நேர்முறையாய் செலுத்தப்படுகின்றது. மற்ற நாடுகளில் மந்திரவாட்சி மறைமுகமாய் நடத்தப்படுகின்றது. சர்வாதிகாரிகள், மந்திரவாதிகள் போன்றே சர்வ வல்லமையும் படைத்தவர்தாமென வெளிப்படையாய்ச் சொல்கின்றனர். மற்ற நாடுகளிலுள்ள மறைமுகமான சர்வாதிகாரிகள் அவ்வாறு வெளிப்படையாய்ச் சொல்லாது, குறிப்பால் தெரிவிக்கின்றனர். இந்நாடுகளில், பணமும், செல்வாக்கு, பரம்பரை, நிர்வாகம், குலமும், இன்னோரன்ன மந்திரவியல்களால் சர்வாதிகாரம் ஏற்பட்டுள்ளது. பேரவாவினால் தூண்டப்பட்டவர்கள், அதிகார வேட்கையால் தவிப்பவர்களின் துணையைப்பெற்று மக்கள் பேதைமையை மூலக் கருவியாய்க்கொண்டு, பெருமையைப் பறை சாற்றுவித்து, பேராரவாரத்தைக் கிளப்பி, விளம்பரம் செய்து, வஞ்சகச் சொற்களை முழங்கிப் பேரொலி மூட்டி, பெரும்பாலானோரை மயக்கி, ஆட்சி செய்யும் அரசாங்க முறையே எங்குமுள்ளது. அறிவையும் தொழிலையும் மூடுபனிபோல் கவிந்துள்ள மந்திரம் விலக்கப்படாததாகி இன்றும் உலகைப் போர்த்துள்ளது. மூடு பனி போன்றுள்ள மந்திரத்தின் மகிமையை ஒழிக்கவேண்டுமாயின், சூரியன் போன்று அறிவின் மாண்பு துலங்கவேண்டும். அதாவது மக்கள் பேதைமையை யகற்றி, அவர்களுக்கு நல்லறிவுறுத்தி, அமைதியாய் அறிவுப் பெருக்கம் செய்து, உழைப்பை உயர்த்தி, நேர்மையை நாட்டி, சீலத்தை வளர்த்து, திருத்தமாய்த் திட்டம் செய்யப்பட்ட சமூக அமைப்பை நிறுவி, தன் நலமும், தற்பெருமையும், தன்னுயர்ச்சியும் கருதாதவரும், பல பல அறிவுகளிலும் தேர்ச்சி யடைந்தவருமான பேரறிஞரின் துணைகொண்டு ஆட்சி நடத்தப்படவேண்டும். அவ்வாறு செய்தல் இயன்றதொன்றே யெனப் பேரறிஞர் பலர் சொல்கின்றனர். ஆனால், அவ்வாறு செய்தற்கு, மந்திரத்தை யோட்டும் வகையில், மக்கள் எல்லோரும் பாடுபடவேண்டும். அதை அவர்கள் செய்துவிடின், நலங்கள் பலவும் பெற்ற நல் வாழ்க்கையை எல்லோரும் அடையலாம். இது நடைபெறுமா ?

---

தமிழ் நாட்டின்

# தற்போதைய நிலை

(பண்டித—எஸ். எஸ். ஆனந்தம்.)



(சென்ற இதழின் தொடர்ச்சி)

சித்தூர் மாவட்டத்திலுள்ள நீதி மன்றங்களிலும் பத்திரப் பதிவு இலாக்காக்களிலும் பழய சாசனங்களெல்லாம் இன்னும் தமிழ்மொழியிலேயே இருப்பதை காண்கின்றோம். இன்று வரை சென்னைப்பட்டினத்தில் வதியும் சுமார் 8 லட்சத்திற்கு மேலுள்ள மக்களில் தமிழர் 7 லட்சத்திற்குமேல் இருக்கின்றனர். தெலுங்கர், மலையாளர், கன்னடர், மார்வாரியர், போன்ற ஏனைய மொழியாளரெல்லாம் ஒரு லட்சத்திற்கும் குறைவாகவே இருக்கின்றனர். அப்படி யிருந்து வருகின்றமையால் சென்னைப்பட்டினத்தின் தெருக்களின் பெயர்களெல்லாம் தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுதப்பட்டிருக்கின்றன.

பல்லாண்டுகட்கு முன் இன்று நாம் வசிக்கும் சென்னைபட்டினமே இல்லை. இப் பட்டினத்தின் கிழக்கெல்லையாக உள்ள வங்காளக் குடாக்கடலின் கரையோரத்தில் சில சிறு குடிசைகளே இருந்தன. அக் குடிசைகளிலிருந்து கடலில் மீன் பிடித்து பிழைக்கும் கரையார் [இவர்கள் பண்டைக்காலத்தில் நெய்தல் நில மக்கள் என வழங்கப்பட்டனர்] என்ற தமிழர்களே வாழ்ந்து வந்தனர். இவர்கள் குடிசைகள் பல சேர்ந்த இடத்திற்கு இன்னும் கரையார் குப்பம் என வழங்குகிறது. இப்போது நாம் பார்க்கிற சென்னைப்பட்டினம் வடக்கே திருவொற்றியூரிலிருந்து தெற்கே அடையாறு வரையிலும் விட்டும் தொட்டும் பல குப்பங்களாக அமையப் பெற்றிருந்தது.

சுமார் முன்னூறு ஆண்டுகட்டு முன் ஆங்கில மக்கள் தங்கள் நாட்டிலிருந்து இந்தியாவிற்கு வாணிபம் செய்ய வந்தார்கள். கடற்கரையை அடுத்துள்ள இந்த வெளி நிலத்தில் தங்கள் பண்டக சாலைகளைக் கட்டிக்கொண்டு வாணிபம் செய்ய விரும்பினார்கள். அக்காலத்தில் இந்த இடம் தமிழ் நாடாகிய செங்கற்பட்டுக்கு அருகிலுள்ள பூந்தமல்லி என்னும் ஊரில் பாளையக்காரர், அல்லது நாயக்கர், வன்னியர், என்னும் தமிர்களுக் குரியதாயிருந்தது. அவர்களிட மிருந்து இந்த இடத்தை வெள்ளைக்காரர் விலைக்கு வாங்கினபோது, நாயக்கர் தங்கள் தகப்பனாராகிய சின்னப்ப நாயக்கருடைய பெயரை இந்த இடத்துக்கு இட வேண்டுமென நிபந்தனை விதித்தார்கள். அதற்கிணங்கி ஆங்கிலர் இந்த இடத்தை வாங்கியவுடன் கடலோரத்தில் ஒரு கோட்டையைக் கட்டினார்கள். இக்கோட்டைக்கு செயின்ட் ஜார்ஜ் கோட்டையெனப் பெயரிட்டார்கள். நாளேற நாளேற, இக்கோட்டையைச்

சுற்றிலும் வீடுகளும், தெருக்களும் பல பேட்டைகளும் ஏற்பட்டன. இதற்கு முதலில் சின்னப்பப் பட்டினம் எனப் பெயரிட்டது மாறி நாளடைவில் சென்னப் பட்டின மென வழங்கலாயிற்று.

ஆந்திரர் சென்னையை முதன் முதலில் தெலுங்கு அரசர்கள் தான் வெள்ளையர்களிடம் ஒப்படைக்கும் புண்ணியத்தை செய்ததால் சென்னைப்பட்டினம் ஆந்திர மாகாணத்தின் தலைநகரம் என்கின்றனர். தெலுங்கு அரசராகிய கிருஷ்ண தேவராயரின் பிரதிநிதியாக திருமலை நாயகர் மதுரையை ஆண்டதால் மதுரை ஆந்திர மாகாணத்தை சேர்ந்தது என்று நாளைக்கு அவர்கள் சொல்லலாம். மேலும், தஞ்சை கோட்டத்திலுள்ள திருவையாற்றில் தெலுங்கு கிர்த்தனங்கள் பாடிய தியாகராஜா பிறந்ததால் தஞ்சை மாவட்டம் அவர்களுடையது என்று சொன்னாலும் நாம் வியப்படைவதற்கில்லை.

வடக்கே இமயமலை யெனும் பனிமலை வரை வழங்கி வந்த தமிழ்மொழி தமிழர் ஆட்சி மறைந்து விந்திய மலைவரை தமிழராட்சியும் தமிழ்மொழி வழக்கும் இருந்தது. விந்தியமலைக்கு வடக்கே வடநாடும், அதற்கு தெற்கே தென்னாடு என்றும், ஒரு பிரிவு தோன்றியது. தமிழ்மக்கள் தங்கள் நாட்டில் ஏனைய மொழியார்களுக்கு இடம் கொடுத்து ஆதரித்ததுவுமன்றி தமது மொழியில் பிறமொழிகளை மிகுதியாகக் கலக்க இடந் தந்தனர். அதனால் திருவேங்கிடமலைக்கு வடக்கே இருந்த தமிழர்களும் பிறமொழியாளர்களாய் மாறிவிட்டனர். அப்போது தமிழின் வடவெல்லை கிருஷ்ண ஆறு வரையில் இருந்ததென்றும் தெரிகின்றது. இவ்வுண்மை தமிழரின் சிறப நூலில் காணப்படுகின்றதென்று காலஞ்சென்ற மகாமகோபாத்யாய டாக்டர். உ. வே. சாமிநாத ஐயர் குறிப்பிட்டிருக்கிறார்கள். அதன் பின் சில காலங்களில், அவ்வெல்லையும் குறைந்துதான் தமிழ்நாட்டுக்குக் கடைக்கால வடவெல்லை திருவேங்கடமலை யாயிற்று. அதை தொல்காப்பிய சிறப்புப்பாயிரத்தில்

"வடவேங்கடம் தென்குமரி ஆயிடை
தமிழ்கூறும் நல்லுலகம்."

எனக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இன்றைக்கு சுமார் 800 ஆண்டுக்கு முன் தமிழ்நாட்டின் மேற்கெல்லையா யிருந்த சேரநாடு சங்கராச்சாரியார் காலத்துக்குப் பின்னர் தமிழைச் சிதைத்து வடமொழியை மிகுதியாய் கலந்து மலையாளமென ஒரு தனிமொழியாயிற்று. இன்றும் சேரநாட்டு ஊர் பெயரும், அரசர் பெயரும், தமிழாகத்தான் இருக்கிறது. அதனால் மேற்பக்கம் தமிழ் நிலமாயிருந்தும் இன்று மலையாள நாடாயது. நீலகிரியில் கன்னடத்தையும் மலையாளத்தையும் கலந்து பேசத்தொடங்கிய பின்னர் தமிழ் சிதைந்து படுக மொழியென ஒரு சிறு தனிமொழி யாகிவிட்டது. அம்மொழிக்கு இன்று தமிழ் எழுத்துதான் இருக்கிறது. இன்

னும் அவர்கள் மலையாளத்தாரைப்போல் எழுத்து புதிதாக் செய்து கொள்ளவில்லை. பிறமொழியாளர், தமது வீட்டின் எல்லை நிலத்தின் எல்லையை எல்லைக்கல் நட்டு பாதுகாத்துக் கொள்வது போல் தமது நாட்டின் எல்லையையும் அயலார் கவர்ந்து கொள்ளாமல் காத்துக்கொள்கின்றனர். தமிழனுக்குமட்டும் தனது நாட்டு எல்லையைப்பற்றி கவலையில்லை.

இதனால் தமிழருக்கு தமது மொழி வழங்கும் தன்னாட்டில் சிறிதும் அன்பும் உணர்ச்சியும் இல்லாமல் தமிழ்மொழியும் குன்றி. தமிழ்நாடும் தேய்பிறைபோல் தேய்ந்து தமிழர்மானமும் வீரமும் மாய்கின்றதென்பது மிகையாகாது. இந்த நிலைமை மாறாமல் தமிழர் இன்னும் சிலகாலம் இருப்பரேல், தமிழ்மொழியும், தமிழர் என்ற இனமும் இல்லாதொழியும். பல மொழிகளுக்கு தாய் மொழியும் பழைமையானதுமாகிய உயர் தனிச் செம்மொழிக்குரிய மக்கள் தங்கள் மொழியையும் நாட்டையும் இழந்து அடிமைகளாய் நடைப்பிணங்களாய் மரியாதையின்றி மானமின்றி வீரமின்றி உயிர் வாழ்வதை விட தமிழ்நாட்டுத் தெற்கெல்லையாகிய கன்னியா குமரியில் தவழும் இந்துமா சமுத்திரம் எனும் தமிழ்மா கடலில் வீழ்ந்து மாய்வதே மேலாகும்.

தமிழர்களே! நீங்கள் செய்யப் போவதென்ன? விட்டுக் கொடுக்கப் போகிறீர்களா? அல்லது,

'நீலத்திரை கடல் ஓரத்திலே—நின்று
நித்தம் தவம் செய்குமரி யெல்லை—வட
மாலவன் குன்றம் இவற்றிடையே புகழ்
மண்டி கிடக்கும் தமிழ்நாடு!'

என்பதைப் பெற கிளர்ச்சி செய்யப் போகிறீர்கள்!!

# வார்தா நினைவுகள்

("சமூகத்தொண்டன்.")

அடிகள் மேலும் சொன்னதாவது—"எனது அன்புடைத் தொண்டர்களே! ஹிந்து முஸ்லீம் பிணக்கு நேர்ந்து எத்தனையோ மக்களைப் பலிகொண்டு விட்டது. இதுபோன்ற கலகநிலையில் ஒவ்வொரு காங்கிரஸ்காரனும் தலையிட்டு நிலைமையைச் சரிசெய்ய வேண்டும்; அப்படித் தலையிட்டு நிலைமையைச் சமாளிப்பதில் தன் உயிரைப் பலியிட நேரினும் சற்றும் தயங்கக்கூடாது. இவ்வண்ணம் செய்யத் துணிபவனே சுத்தவீரமுடைய உண்மை அஹிம்சாவாதி" என்று சொல்லிக்கொண்டே இடுப்பிலுள்ள கடிகாரத்தைப் பார்த்தார்; "மணியாயிற்று. உங்களுக்காக நான் ஒதுக்கிவைத்த நேரம் கழிந்துபோயிற்று; இனி நீங்கள் போகலாம்" என்ருர்.

உடனே திருநெல்வேலி திரு. A. கிருஷ்ணன் "ஆனாலும், இன்னும் சற்றுநேரம் தாங்கள் பேசுவதால் இன்னும் அதிக நலம் விளையுமென்று நாங்கள் நம்புகிறோம். எங்கள் கருத்தைத் தாங்கள் ஆமோதிப்பதாயின், தாங்கள் இன்னும் ஏதாவது சொல்லலாம்" என்று இறைஞ்சினர். அடிகளும் இசைந்து கதர் இயக்கத்தைப்பற்றிப் பேசிக்கொண்டிருக்கும்போது சேவா கிராமத்து மணி எல்லோரையும் "இரவு சாப்பாட்"டிற்கு எச்சரித்தது. அடிகள் மேற்கொண்டு ஒரு வார்த்தை சொல்லாமல் எழுந்து, எங்களை வாழ்த்தி நடந்தார். திரு. சுசீலா நாயரும் அடிகளைத் தொடர்ந்தார்.

இவ்வாறு, அடிகள் கூறிய அறிவுரைகளையெல்லாம் எங்கள் நெஞ்சங்களில் இட்டு, பூட்டிச் சீல் வைத்துக்கொண்டு புறப்பட்டோம்.

## சேவா கிராமத்தின் செம்மை

"சேவா கிராமம் என்ருல் இவ்வளவு தானே? அப்படியானல் அடிகள் தான் சேவாகிராமம்; சேவா கிராமம்தான் அடிகள்!" என்று வாசகர்கள் நினைப்பது முழுதும் இயற்கை. ஆம். ஆயினும் கோயிலில் சிவமூர்த்தத்தைச் சூழ எத்தனையோ சிறு மூர்த்தங்கள் இருப்பதுபோல், அடிகளைச் சூழ்ந்து எத்தனையோ அரிய அன்பர்கள் சேவாக்கிராமத்தி லுள்ளார்கள். அவர்களில் திரு. கஸ்தூரி பாய் காந்தி, திரு. ராஜகுமாரி அமிர்த கௌரி, திரு. சுசீலா நாயர், திரு. மகாதேவ தேசாய், பியாரிலால், ஐரோப்பிய அன்பர் பரதாநந்தா, அந்த ஐப்பானிய புத்தபிக்ஷு, திரு. அரிய நாயகம் தம்பதிகள் ஆகியோர் முக்கியஸ்தர்.

சேவா கிராமம் திரு. ஜம்னலால் பஜாஜ் அவர்களின் சொந்தக் கிராமம். அதில் 150 வீடுகள் இருக்கின்றன. சுமார் 700 மக்கள் உளர். அது வார்தாவிலிருந்து 5 கல் தொலைவில் உளது. முன்பு பாதையே கிடையாது. ஆனல், காங்கிரஸ் கட்சி மந்திரி

சபைகளை யேற்றுக்கொண்டபின் நல்ல முதல்தர பாதை யொன்றை வார்தாவிலிருந்து செம்மையாய் அமைத்துவிட்டனர். அங்கு ஒரு போஸ்டாபீஸும் உண்டு. தந்தி ஆபீஸும் அமைக்கப்பட்டு, நாள் ஒன்றுக்கு சுமார் ஒரு நூறு தந்தி போகவர விருக்கின்றது. டெலிபோனும் உளது. திரு. சுசீலா நாயரின் பார்வையில் ஓர் வைத்தியசாலை Dispensary—யும் உளது. வார்தா கல்வித்திட்டத்தைத் தழுவி ஓர் பள்ளி நடைபெறுகிறது.

## சேவாகிராமத்துக் குழந்தைகள்

மாலை வேளையில் வார்தா சேவா கிராமப் பாதையில் வண்டி நடமாட்டங்கள் அதிகம். நீங்கள் சேவாகிராமங்கள் போனால் முதன் முதலாய் உங்களை முறுவலிக்கும் முகத்துடன் வந்து அழைக்கும் நபர்கள் அவ்வூர்க் குழந்தைகள்! நீங்கள் பாதையினூடே செல்லும்போது அச்சிறு குழந்தைகள் உங்கள் முன்னே வந்து "நமஸ்தே பாபூ" என்று சொல்லும்போது நீங்கள் உங்களையே மறந்து கற்பனை யுலகில் தாவுவீர்கள். "இது என்ன! அடிமை பாரதமா? அல்லது அமர நாடா?" என்று குழந்தை உள்ளம் எந்த பேராசைக்கும், அமர்த்தலுக்கும், மிருகத்தனத்திற்கும், 'சுரண்டலுக்கும், கட்டுப்படுவதன்று, பணிவதன்று. ஆனால், அது அன்பு ஒன்றிற்கே கட்டுப்படுவது. ஆகவே சேவாக்கிராமக் குழந்தைகள் அன்பின் வயத்தராகி, அங்கு செல்வோரை அன்பால் வரவேற்கின்றன. ஆகவே, சேவாகிராமம் அமர நாடு தான். அடிமை பாரத மன்று.

## அடிகள் மாலை உலா

மாலை உணவு கழிந்ததும் அடிகள் உலாவச் செல்வது வழக்கம். அப்போது அவரைத் தரிசிக்கப் பலர் சேவா கிராமம் சென்று அடிகள் செல்லும் பாதையின் இருமருங்கிலும் நின்று கைகூப்பியவண்ணம் தரிசிப்பார்கள். பாதையினூடே அடிகள் ஒன்றேகால் மைல் சென்று திரும்புவார். அவருடன் மேலே குறித்த ஆசிரமவாசிகளும் செல்வர். அடிகள் உலவச் செல்லு முன் அந்த ஜப்பானிய புத்த பிக்ஷுவும் "டும்......டும்" என்று ஒரு தம்பட்டத்தை யடித்துக்கொண்டு பாடியபடியே உலவச் செல்வார். அவர் செல்லும்போது நமது எண்ணங்களும், நினைவுகளும் 2000 ஆண்டுகட்கு முன்னிருந்த புத்தமதச் சிறப்பைத் தாவுகின்றன. உலவச் சென்று திரும்பிய அடிகள் சற்று களைப்பாறியபின், சரியாய் 7½ மணிக்கு பிரார்த்தனைமணி யொலிக்கிறது.

## சேவாகிராமப் பிரார்த்தனை

எங்கும் ஒரே இருள். நகரத்து சந்தடி சேவா கிராமத்தில் செல்வதில்லை. விண் மீன்கள் அடிகளைக் காண விழைவதுபோல் கண்களைச் சிமிட்டிக்கொண்டு வான வெளியில் நிற்கின்றன ஆசிரமவாசிகளும், வெளியிலிருந்து தொழுகைக்கு வந்திருப்போரும், ஆசிரமக் குடில்களுக்கு முன் விரிக்கப்பட்டுள்ள ஈச்சன் ஓலைத் தடுக்குகளில் அமர்கின்றனர். அப்படி அமர்வதில் ஓ

விதியுண்டு. ஆட்வர் ஓர்புறம், மகளிர் ஓர்புறமாக அடிகள் அமர்வதற்குப் போடப்பட்டுள்ள இருக்கைக்கு முன் இருத்தல் வேண்டும். திரு. கஸ்தூரிபாய் காந்தி, ராஜகுமாரி அமிர்தகௌரி, சுசீலா நாயர், ஆச்சார்யா விநோபாவின் உடன்பிறந்தார் ஒருவர் (இவர் சித்தார் வாசித்துக்கொண்டே தொழுகையில் கலந்து கொள்ளுபவர்) ஆக இவர்கள் அடிகளுக்கென்று அமைக்கப் பட்டுள்ள இருக்கைக்குமுன் அவ்விருக்கையை நோக்கிய வண்ணமே அமர்கின்றனர். ஒழுக்கம் என்றால் அங்கேதான் காண வேண்டும். எங்கும் ஒரே மௌனம்! பிறகு அடிகளை யழைத்து வர ஓர் முஸ்லீம் மங்கை அடிகள் குடிலுக்குச் செல்லுகிறார். அவர் ஆசிரமத்திலேயே வதியும் ஓர் உயர் குடிமகள். அவ்வம்மையார் கையில் விளக்கோடும், துளசிதாஸ் ராமாயணத்தோடும் காந்தி யடிகள் கைப்பற்றி அழைத்துவர அந்த சேவாகிராமத்து முனிவர் மெல்ல அசைந்து பின்னே வந்து தமது இருக்கையில் எழுந்தருள்கின்றார். அச்சபையில் ஓர் வெடிகுண்டு வெடித்தா லும் அங்கு குழுமியுள்ளார், மௌனம் கலையாமல் மகா மௌன நிலையில் இருக்கின்றனர். பிறகு ஒளிரும் விளக்குகளெல்லாம் இறக்கப்படுகின்றன. பிரார்த்தனை தொடங்குகிறது. பிரார்த் தனை யென்றால் பிரார்த்தனைதான்! மங்கையர் எல்லோரும், தமது குயிலினு மினிய குரல்களைச் சித்தாருடன் கலந்து இசை வெள்ளம் பெருக்குகின்றனர். இவ்வாறு சுமார் பதினைந்து நிமி ஷங்கள் சென்றபின் அந்த பதினொரு கொள்கைகள் (அஹிம்சா சத்தியஸ்தேயோ..............") பிறகு துளசிதாஸ் ராமாயணம், இந்த துளசிதாஸ் ராமாயணம், ஒவ்வொருவர் கையிலும் ஒன் றுளது. அடிகளும் தமது விளக்கை உயர்த்தி அதை மௌன மாகப் பார்த்துக்கொண்டிருக்கின்றார். இவ்வாறு பிரார்த்தனை முடிவுற்றதும் ஆசிரமவாசிகள் இரவு 9 மணிவரை இராட்டை நூற்றல் ஆகிய பணிசெய்து பின்னர் உறங்கப்போகின்றனர். ஆனால், அந்த அஹிம்ஸா மூர்த்தியாகிய அடிகள்மட்டும் இரவு 11 மணிவரை ஏதோ வேலைசெய்தவண்ண மிருப்பதாய்க் கூறப் படுகிறது.

### வார்தா கல்வித் திட்டம்

யான் இன்னொரு சிறந்த இயக்கத்தைப்பற்றிக் கூறாமல் விட முடியவில்லை; அதுதான் வார்தா கல்வித்திட்டம். அது ஜாக்கருசேன் கமிட்டியால் வகுக்கப்பட்டு, அடிகள் வாழ்த்தையும் பெற்றுள்ள ஓர் அரிய இயக்கம். இக்காலத்தில், கல்வித் துறையில் பேரறிஞர்களாயுள்ளோரெல்லாம், இந்தியாவின் பல் கலைக் கழகங்களின் கல்வித்திட்டங்களில் அடிப்படியான மாறுதல் செய்யவேண்டுமென்று சொல்லுவதற்கொப்ப மிகத் தகுதியான திட்டமாய் அமைந்துள்ளது இந்த வார்தா கல்வித் திட்டம் என்பது. இத்திட்டத்தை பாரத நாட்டு அறிஞர்களெல்லாம் புகழ்ந்துவைத்ததுபோல் உலகப் பெரியோர்களும் போற்றியிருக் கிறார்கள்.

(தொடரும்)

தொடர் கதை.

# தேவ தேவி

(வத்றுப்-சு. மீ. கணபதி)



(சென்ற இதழின் தொடர்ச்சி.)

"உன் புட்வை இல்லை என்றுதான் அவள் குறைப்படுகிறாளாக்கும். அதெல்லாம் எங்களுக்கு வேண்டாம். நாங்கள் புறப்படுவதற்கு எப்பொழுது ரயில் என்று விசாரித்துச் சொன்னால் போதும்."

"அந்தமாதிரி சொல்லக்கூடாது. அன்பின் காரணமாக நான் வாங்கிக் கொடுப்பதை மறுக்கக்கூடாது. நானே சென்று வருகிறேன்" என்று அவர்கள் பதில் சொல்லு முன்பு சென்றான். ஐம்பது ரூபாயில் ஒரு புடவையும், அதற்கேற்ற ஜாக்கட் துணிகள் இரண்டும், பத்மாசனிக்கு இருபது ரூபாயில் ஒரு புடவையும், சோப், சென்டுவகை சுவர்ணாவுக்கும் வாங்கிக்கொண்டு வந்து அவர்களிடம் கொடுத்தான். "நான் வேண்டாமென்றேனே. எதற்காக வாங்கி வந்தாய்? இந்தப் பணத்தை என் கையில் கொடுத்திருந்தால் சுவர்ணாவின் கல்யாணத்திற்கு ஆகியிருக்குமே. இல்லாவிடில் நாங்கள் இங்கு வந்துபோன செலவு தொகைக்கு ஈடு செய்திருக்கலாம். வாங்கிக் கொண்டு வந்தாயிற்று" என்றாள் பத்மாசனி.

"நீங்கள் அதைப் பெற்றுக்கொள்வீர்களோ என்று சந்தேகித்தேன். சுவர்ணாவின் மணத்திற்கு நான் பணம் கொடுப்பதாக வாக்குக் கொடுத்திருக்கும் பொழுது அதைப் பற்றிய கவலை உங்களுக்கு வேண்டாம். வந்து திரும்பும் செலவுக்காக இதை வைத்துக்கொள்ளுங்கள்" என்று கூறி ஐம்பது ரூபாய் கொடுத்தான். சந்தோஷத்துடன் பத்மாசனி அதைப் பெற்றுக் கொண்டாள். அவள் மனம் சிறிது சபலமுற்றது. இவ்வளவு அன்பு காட்டும் இவனுடனேயே இருந்துவிட்டால் என்ன? ஆனால் நாம் மறுபடி இங்கிருப்பதாகக் கூறுவது அழகல்ல என நினைத்து மனதைத் திடப்படுத்திக்கொண்டாள். அதன் பின்பு பழைய நாட்கள் சமாசாரத்தை இருவரும் பேசிக் கொண்டிருந்தனர். அப்பொழுது சுந்திரா அங்கு வந்தாள். அவளைக் கண்டு பத்மாசனி முகத்தைச் சுழிக்கினாள். சுந்திராவும் அதனைக் கவனித்துச் சிரித்தாள்.

"வீடு பார்த்தீர்களா? எங்கள் தெருவிலேயே ஒரு வீடு இருக்கிறது நல்ல காற்றோட்டமான தனி வீடு. வாடகையும் மிகவும் கொஞ்சம். மாமி என் கூட வந்து பாருங்கள். உங்களுக்கு மிகுந்த சௌகரியமாயிருக்கும். என்ன பேசாமலிருக்கிறீர்களே" என்றாள் சுந்திரா.

"நாங்கள் இன்று ஊருக்குப் போகிறோம். உங்கள் இடத்தில் சொல்லிக் கொள்ள மாலையில் வரலாமென்றிருக்கிறேன்."

"நீங்கள் சொல்வது என்ன—ஊருக்குப் போகவா? ஏன் இந்த ஊர் பிடிக்கவில்லையா? மனுஷாள் பார்க்க சகிக்கவில்லையா? ஆனால் நீங்கள் வந்தது எதற்காக? ஊரைக்கூட சுற்றிப் பார்க்கவில்லை போலிருக்கிறதே."

"ஊரைப் பற்றியும், மனிதரைப் பற்றியும் ஒன்றுமில்லை. நாங்கள் வந்த காரியம் கைகூடவில்லை. அதனால் போகிறோம். உனக்கு விவாகம் செய்யவில்லையா?"

" எனக்கு விவாகமே கடைபெறக் கூடாது என்பதுதான் எண்ணம். உங்கள் அனுபவத்தில் தெரிந்திருக்கலாமே! ஆடவர்கள் மகா மோசமானவர்கள். நம்மை வேலைக்காரியிலும் கேவலமாக நடத்துவார்கள். வேலைக்காரியை அடிக்க முடியுமா? நம்மை சமயங்களில் அடிக்கவும் செய்கிறார்கள். இதை எல்லாம் நான் கண்டும், கேட்டுமிருப்பதனால் தனிமையாகவே காலங்கழிக்க உத்தேசிக்கிறேன். என் உறவினர், நண்பர்களுக்கும் இப்படியே உபதேசம் செய்வதுதான் நான் செய்யப்போகும் கைங்கர்யம். நீங்கள் வந்த காரியம் கைகூடவில்லை என்றீர்களே நீங்கள் இங்கு வந்தது இதோ இவரையும் (வாசுவைச் சுட்டிக் காண்பித்து) அவர் தகப்பனாரையும் கவனித்துக் கொள்ளத்தானே. இப்பொழுது உங்களை வேண்டாமென்று சொல்கிறாரா? பார்த்தீர்களல்லவா, இது போன்றுதான் மற்ற ஆடவரும்."

" சுந்திரமா உன் பேர்? ரொம்ப அனுபவ முள்ளவளைப்போல் பேசுகிறாயே! நீ கூறுவ தெல்லாம் தவறு. வேலைக்காரியை அடிக்க முடியுமா என்று கேட்டாயே, உன்மீது செலுத்தும் அன்பை உன் புருஷன் வேலைக்காரியிடம் செலுத்த முடியுமா என்பதையும் யோசித்துப் பார். அடித்தாலும் ஆதரவு செய்வார்கள். நீ கெட்டுப் போவது மல்லாமல் உன் பிரசாரத்தால் மற்றவரையும் கெடுக்காதே " என்றாள் பத்மாசனி.

" என்னமோ என் மனதில் பட்டதைச் சொன்னேன். தாங்கள் திரும்பிப்போக வேண்டும் என்றது எதற்காக என்று சொல்ல வில்லையே. அட இதென்ன! புடவைகள். இதெல்லாம் யாருக்கு? சரிதான் இவைகளைக் கொடுத்து உங்களை திரும்பப் போகச்சொல்லி விட்டாரோ இவர். ரொம்ப நல்ல வேலைதான் இது. இதற்கு உங்களை இங்கு வரச் சொல்வானேன். பார்சலில் அனுப்பியிருக்கலாமே. ரயில்வேக்காரனுக்கு அனாவசியமாகப் பணமா? அதைக் கொண்டு வேறு சாமான்கள் வாங்கி யிருக்கலாமே. சென்றது சென்று விட்டது."

" இவள் பேசுவதைக் கண்டு வாசு உட்பட யாருக்கும் என்ன பேசுவதென்றே புலப்படாமல் உட்கார்ந் திருந்தனர். பத்மாசனிக்கு ஆத்திரம். சுவர்ணத்திற்குச் சிரிப்பு. வாசுவுக்கு இவள் கலாட்டா செய்ய வந்திருக்கிறாள் என்ற எண்ணம். அவளிடம் என்ன பேசுவது என்று தெரியாமலிருந்தான்."

"என்னுடன் பேச உங்களுக்கு விருப்பமில்லை என்று தெரிகிறது. நான் பரிவாக விசாரித்தேன். சரி. நான் போகிறேன். உங்களுக்கு மனக்கஷ்டம் ஏன்?" என்றாள் சுந்திரா."

"நன்றாயிருக்கிறது நீ பேசுவது. நீ இருந்தால் எங்களுக்கு என்ன கஷ்டம்? உனக்குப் பதில் சொல்லத்தான் எனக்குத் தெரியவில்லை நீ படித்தவள். நான் படித்ததில்லை. நீ வந்த காரணமென்ன ஒன்றும் சொல்லாமல் எதையோ பேசுகிறாயே " என்றாள் பத்மாசனி.

" வீடு விஷயமாகவும், உங்களையும் பார்த்துப் போகலாமென்றுந்தான் நான் வந்தது. இங்கு வந்த பிறகு நீங்கள் ஊர் போகப்போவதாகச் சொன்னீர்கள். நீங்களெல்லாம் இங்கிருந்தால் அவருக்கும் சௌகரியம். எனக்கும் சுவர்ணம் இருப்பதில் சந்தோஷமாயிருக்கும். ஆனாலும் இவர் உங்களைத் தருவித்த பின்பு போகச் சொல்லவேண்டியதில்லை."

"அவன் போகச் சொல்லவில்லை.நாங்களாகவேதான் போவதாகத் தீர்மானித்தோம். எங்களுக்கு ஊரில் வேலையிருக்கிறது. வேறு எதற்காகவும் நாங்கள் போக வில்லை."

" நீங்கள் கூறுவது நம்பத்தகுந்த தல்ல. ஊரில் வேலையிருந்தால் இங்கு வந்திருக்கவே மாட்டீர்கள். காரணம் எதுவோ யிருக்கிறது. நீங்களாகச் சொன்னாலன்றி நான் உங்களை வற்புறுத்தித் தெரிந்து கொள்ள விரும்ப வில்லை. ஆனால் ஒன்று மாத்திரம் நான் சொல்ல விரும்புகிறேன். இவர் உங்கள் சௌகரியம் போல நடந்து கொள்வார். அவ்வளவு நல்ல குணம்."

" நீ என்னமோ தெரியாமல் பேசுகிறாய். நல்ல குணமுடையவன் என் பது எனக்குத் தெரியும். நான் சொல்லியதைக் கேட்க மறுத்து விட்டத னாலேயே நாங்கள் செல்லும்படி யாயிற்று. நீயே சொல்லு. சுவர்ணாவுக்கு அழகில்லையா, படிப்பில்லையா அவள் எதில் குறைவா யிருக்கிறாள்? அவளை மணந்து கொள்ள மறுத்து விட்டான். வயதான பெண்ணை இங்கு அதன் பின்பும் வைத்துக் கொண்டு நானிருப்பது நன்றாக யில்லை."

"அப்படியா சமாசாரம்! சுவர்ணாவைப் போன்ற குணமுடைய பெண் கள் கிடைக்கத் தவம் செய்திருக்க வேண்டும். நான் ஆண் பிள்ளையா யிருந்தால், அல்லது எங்கண்ணா மணமாகாதவரா யிருந்தால், குதிபோட்டுக் கொண்டு அவளை எங்கள் வீட்டிற்கு அழைத்துச் செல்வேன். அருமை தெரியாத மனுஷர் இவர். உங்களைப்போன்று பரிவுடன் நடந்து கொள்ளும் சம்பந்திகள் கிடைக்கவா போகிறார்கள்! வேறு இடத்தில் மணம் நடந்தால் அதன் பின்பு தெரியும் உங்களுடைய அருமை."

" என்ன சுந்திரா! ஒரே யடியாகப் பேசுகிறாய். இவ்வளவு பேச எங்கு கற்றுக் கொண்டாயெனத் தெரிய வில்லையே, எனக்கு அறிவு புகட்டவும் துணிவாய் என நினைக்கிறேன். நீ சிறு பெண். சிறிது பேசாமலிரு" என்றான் வாசு.

" என்னடா அவள் வாயை மூடுகிறாய்! சிறு குழந்தையா யிருந்தாலும் என்ன புத்திசாலித் தனமாய்ப் பேசுகிறாள். அவள் கூறுவது வாஸ்தவந் தானே. தவறு ஒன்று மில்லையே. இது மாதிரி இவன் பேசுவதால்த்தான் நான் ஊருக்குப் போக வேண்டு மென்கிறது " என்றாள் பத்மாசனி.

"மாமி, நான் பேசக் கற்றுக்கொண்ட தெல்லாம் இவரிடமிருந்துதான். சிறுவயதில் இவர் எனக்குப் பாடம் கூட சொல்லிக் கொடுத்திருக்கிறார். நான் அதிகப் பிரசங்கம் செய்வதாக இவர் கருதினால் அது இவருடைய பாடத்தினாலும், அருளினாலும் கிடைத்தது தவிர வேறில்லை. இந்தப்பட்டம் இவரிடமிருந்தே எனக்குக் கிடைத்ததி லிருந்து இவர் அடிச்சுவட்டை நான் பின்பற்றி வருகிறது நன்கு தெரிய வரும். நான் கூறுவது பொய்யென் றால் இவரையே கேளுங்கள் " என்றாள். பெண்கள் இருவரும் சிரித்தனர்.

"எனக்கு அதிகப் பிரசங்கி என்ற பட்டம் கொடுத்து விட்டாய். நல்லது என்னிடமிருந்து இந்த ஒரு பாடம் சரிவரக் கற்றுக்கொண் டிருக்கிறாய் என்பதுதானே உன் எண்ணம். குருவுக்கு பட்டம் வழங்கும் சிஷ்யை. இதுபோன்று நீங்கள் நினைக்கக்கூடாது. சுவர்ணாவை மணந்துகொள்ள வேண்டும். என் வேடிக்கையைக் காண்பிக்க அப்பொழுது எனக்கும் சௌகரியம். ஆசையுடன் நான் கூறுகிறேன். மாமி நீங்கள் இது விஷ யத்தில் தாட்சண்யமே காண்பிக்கக்கூடாது. அவர்கள் குடும்பத்தில் பெண் களில் நீங்களே பெரியவர்கள். அவர் நலத்தைக் கவனிக்க வேண்டியவர் கள். ஆகவே உங்கள் கடமையைச் செய்வதில் பின் வாங்கக்கூடாது. உங்கள் பேச்சுக்கு எதிராக இவரைப் பேசவும் அனுமதிக்கக்கூடாது. நான் பேசுவது இவருக்கு கஷ்டமாக இருக்கலாம். மனதில் பட்டதை அவ ரையும் உங்களையும் உத்தேசித்துச் சொன்னேன்."

"நீ கூறுவதெல்லாம் வாஸ்தவந்தாண்டியம்மா. நான் என்ன செய்ய முடியும்? இந்தக் காலத்துப் பிள்ளைகள் இப்படியிருக்கிறார்கள். பெரியவர்கள் நம் நலத்தைத் தான் விரும்புவார்கள் என்று நினைப்பதுகூடயில்லை. குடும்பத்தில் பெரியவர்கள் இருப்பதையே பாரமாகக்கூட சிலர் நினைக்கின்றனர். என் காலத்திலெல்லாம் பிள்ளைகள் பேசி அறியமாட்டோம். சிறிது படித்துவிட்டால் மற்றவர்களுக்கு ஒன்றுந் தெரியாது என இவர்கள் நினைத்துப் பேசுகின்றனர். காலத்தின் கோலமிது."

"சுவர்ணம் நீ பேசாமலிருந்தால் எப்படி? தற்காலப் பெண்களைப் போன்று இருக்கவேண்டாமா? உங்கம்மா பேச நீ மௌனம் சாதிக்கிறாயே. நீயல்லவா இவரைச் சரிப்படுத்த வேணடும். நீ தான் காரியத்தைக் கெடுத்து விட்டாய். ஒருவருக்கொருவர் மனம் பிடித்தால் அவர்களே பேசிக் கொள்ளவேண்டும். முடிவும் அவர்களே செய்து கொள்ளவேண்டும். லௌகீக காரியங்களைத் தான் பெரியவர்கள் பார்த்துக் கொள்ள விடவேண்டும். உன் அம்மாவை நான் அழைத்துப் போகிறேன். அவரை இணங்கும்படி செய்வதற்கு முயற்சி செய். இதில் வெட்கமென்ன இருக்கிறது? பேச்சுத் தானே! 'ஆசை வெட்கமறியாது' என்ற சொல்லையே பொய்யாக்கி விடுவாய் போலிருக்கிறதே! ஏன் மாமி நான் சொல்வதில் தவறு இல்லையே."

"நாமிருந்தால் தானென்ன அவர்கள் பேசிக் கொள்வதைத் தடுக்கப் போகிறோமோ? இருவரும் உறவினர் தானே. பேசுவதில் தவறில்லை. ஆனாலும் இனிமேல் பிரயோசன மேற்படப் போகிறதில்லை."

"அப்படிச் சொல்லாதீர்கள். முயற்சித்தால் நடைபெறாததும் உண்டோ? அடித்தால் அம்மியும் நகரும் என்பார்கள். கூடவே சில நாட்களிருந்து இருவரும் பாடம் படித்துப் பாருங்கள். முயற்சியில் வெற்றி யுண்டானால் நல்லதுதானே என்றாள் சுந்திரா. அச்சமயம் சோமுவும் வந்து சேர்ந்தான். அவனைக் கண்டு ஆனந்த மடைந்தது வாசுவின் மனம். இதுவரை சுந்திராவின் குறும்புப் பேச்சுகளால் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்த அவனுக்கு, விடுதலை ஏற்பட்டாற் போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. வா சோமு! நல்ல வேளையாக வந்தாய். உன் தங்கை பேசியவற்றை இதுவரை நீ கேட்காமலிருந்தது பற்றி நாள் வருந்த வேண்டியிருக்கிறது. எங்களுக்கெல்லாம் அறிவு புகட்ட ஆரம்பித்து விட்டாள். பெரிய லெக்சர் நோற்றுப் போகும். அவளைப் படிக்க வைத்ததே தவறு. அப்பா பெரிய வாயாடிதான் போ."

"உனக்குத்தான் அவள் சமாசாரம் தெரியுமே. எந்தக் காரியமாயிருந்தாலும் தன் தலையில் அக்ஷதையைப் போட்டுக்கொண்டு வந்து விடுவாளே. இங்கு உட்கார்ந்து பேசிக்கொண்டே யிருக்கிறீர்களே மற்ற வேலைகளெல்லாம் முடிந்து விட்டதா? என்றான் சோமு."

"அண்ணா இவர்களை ஊரில் நிம்மதியாக இருப்பதைக் கெடுத்து இங்கு வரச் சொல்லி, திரும்ப ஊருக்கு அனுப்பி வைக்கப் போகிறார். பணம் வீண் செலவு ஆனதுதான் மீதி. நியாயத்தைச் சொன்னேன். நான் சிறியவள் என்ற காரணத்திற்காக நியாயத்தை எடுத்துக் கொள்ளாமல் வாயாடி எனப் பட்டம் கொடுக்கிறார்களாம். அவர்கள் இன்றைக்கே ஊருக்குப் போகப் போகிறார்களாம். சில மணி நேரங்கள் பழகிய எனக்கு சுவர்ணவை விட்டுப்பிரிய மனமில்லை. அவளை மணந்து கொள்ளச் சொல்லியதற்கு இவர் மறுத்து விட்டதே காரணம். என் புத்தியில் என்ன படுகிறதென்றால் சிறிதுநேரம் இவர் சுவர்ணவுடன் பேசட்டும். அவள் இவரை மணந்து கொள்ள மறுத்தாலும் இவர் விடமாட்டார் என்றே எனக்குத் தோன்றுகிறது. இதனால் அவர்களைச் சில நாட்கள் தங்கிப் போகும்படி யோசனை கூறிக் கொண்டிருந்த பொழுது நீங்கள் வந்தீர்கள்" என்றாள் சுந்திரா.

# சுபானு ஸூ தைமீ நவக்கிரக * நிராயன சுத்த ஸ்புடம்

(இந்தியா ஸ்டாண்டர்ட் கடியாரமணி-சென்னை காலை 7-மணிக்கு)

| தேதி | நக்ஷத்திர ஹோரை | | | சூரியன் | | சந்திரன் | | அங்காரகன் | | புதன் | | குரு | | சுக்கிரன் | | சனி | | †ராகு | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ம | நி | ச | பா | க | பா | க | பா | க | பா (வ) | க | பா (வ) | க | பா | க | பா | க | பா | க |
| 1 | 7 | 29 | 07 | 270 | 22 | 128 | 43 | 42 | 01 | 258 | 25 | 122 | 36 | 229 | 59 | 58 | 00 | 104 | 25 |
| 2 | 7 | 33 | 04 | 271 | 22 | 140 | 32 | 42 | 04 | 257 | 39 | 122 | 30 | 231 | 11 | 57 | 57 | 104 | 21 |
| 3 | 7 | 37 | 00 | 272 | 21 | 152 | 21 | 42 | 08 | 256 | 53 | 122 | 24 | 232 | 23 | 57 | 53 | 104 | 18 |
| 4 | 7 | 40 | 57 | 273 | 21 | 164 | 25 | 42 | 13 | 256 | 26 | 122 | 18 | 233 | 35 | 57 | 50 | 104 | 14 |
| 5 | 7 | 44 | 53 | 274 | 20 | 176 | 29 | 42 | 18 | 255 | 59 | 122 | 12 | 234 | 48 | 57 | 46 | 104 | 12 |
| 6 | 7 | 48 | 50 | 275 | 20 | 189 | 05 | 42 | 24 | 255 | 51 | 122 | 06 | 236 | 00 | 57 | 42 | 104 | 08 |
| 7 | 7 | 52 | 46 | 276 | 19 | 201 | 42 | 42 | 30 | 255 | 43 | 121 | 59 | 237 | 13 | 57 | 39 | 104 | 05 |
| | | | | | | | | | | வ | நி | | | | | | | | |
| 8 | 7 | 56 | 43 | 277 | 19 | 215 | 06 | 42 | 38 | 255 | 51 | 121 | 53 | 238 | 25 | 57 | 36 | 104 | 02 |
| 9 | 8 | 00 | 39 | 278 | 18 | 228 | 31 | 42 | 46 | 255 | 59 | 121 | 46 | 239 | 38 | 57 | 33 | 103 | 59 |
| 10 | 8 | 04 | 36 | 279 | 18 | 242 | 49 | 42 | 55 | 256 | 21 | 121 | 39 | 240 | 50 | 57 | 30 | 103 | 56 |
| 11 | 8 | 08 | 32 | 280 | 17 | 257 | 07 | 43 | 04 | 256 | 43 | 121 | 32 | 242 | 03 | 57 | 27 | 103 | 53 |
| 12 | 8 | 12 | 29 | 281 | 17 | 272 | 04 | 43 | 14 | 257 | 12 | 121 | 25 | 243 | 15 | 57 | 24 | 103 | 50 |
| 13 | 8 | 16 | 25 | 282 | 16 | 287 | 02 | 43 | 24 | 257 | 41 | 121 | 18 | 244 | 28 | 57 | 21 | 103 | 47 |
| 14 | 8 | 20 | 22 | 283 | 15 | 302 | 07 | 43 | 35 | 258 | 30 | 121 | 11 | 245 | 41 | 57 | 18 | 103 | 44 |
| 15 | 8 | 24 | 18 | 284 | 15 | 317 | 13 | 43 | 37 | 259 | 19 | 121 | 04 | 246 | 54 | 57 | 16 | 103 | 40 |
| 16 | 8 | 28 | 15 | 285 | 14 | 332 | 53 | 43 | 59 | 259 | 40 | 120 | 57 | 258 | 07 | 57 | 13 | 103 | 37 |
| 17 | 8 | 32 | 11 | 286 | 14 | 346 | 33 | 44 | 12 | 261 | 02 | 120 | 49 | 249 | 20 | 57 | 11 | 103 | 34 |
| 18 | 8 | 36 | 08 | 287 | 13 | 0 | 28 | 44 | 26 | 262 | 00 | 120 | 42 | 250 | 33 | 57 | 08 | 103 | 30 |
| 19 | 8 | 40 | 04 | 288 | 12 | 14 | 23 | 44 | 40 | 262 | 59 | 120 | 34 | 251 | 46 | 57 | 06 | 103 | 27 |
| 20 | 8 | 44 | 01 | 289 | 12 | 27 | 31 | 44 | 54 | 264 | 02 | 120 | 27 | 252 | 59 | 57 | 04 | 103 | 24 |
| 21 | 8 | 47 | 57 | 290 | 11 | 40 | 39 | 45 | 09 | 265 | 06 | 120 | 19 | 254 | 12 | 57 | 02 | 103 | 21 |
| 22 | 8 | 51 | 54 | 291 | 11 | 53 | 10 | 45 | 25 | 266 | 14 | 120 | 12 | 255 | 25 | 57 | 00 | 103 | 17 |
| 23 | 8 | 55 | 50 | 292 | 10 | 65 | 42 | 45 | 41 | 267 | 23 | 120 | 04 | 256 | 38 | 56 | 58 | 103 | 14 |
| 24 | 8 | 59 | 47 | 293 | 10 | 77 | 49 | 45 | 57 | 268 | 35 | 119 | 56 | 257 | 51 | 56 | 57 | 103 | 11 |
| 25 | 9 | 03 | 43 | 294 | 09 | 89 | 56 | 46 | 14 | 269 | 47 | 119 | 48 | 259 | 05 | 56 | 55 | 103 | 08 |
| 26 | 9 | 07 | 40 | 295 | 09 | 101 | 49 | 46 | 32 | 271 | 02 | 119 | 40 | 260 | 23 | 56 | 54 | 103 | 05 |
| 27 | 9 | 11 | 36 | 296 | 08 | 113 | 43 | 46 | 49 | 272 | 18 | 119 | 32 | 261 | 41 | 56 | 52 | 103 | 02 |
| 28 | 9 | 15 | 33 | 297 | 08 | 125 | 31 | 47 | 07 | 273 | 36 | 119 | 24 | 262 | 49 | 56 | 51 | 102 | 58 |
| 29 | 9 | 19 | 30 | 298 | 07 | 147 | 20 | 47 | 25 | 274 | 55 | 119 | 16 | 263 | 58 | 56 | 50 | 102 | 55 |
| 30 | 9 | 23 | 26 | 299 | 07 | 159 | 13 | 47 | 44 | 276 | 16 | 119 | 08 | 265 | 11 | 56 | 49 | 102 | 52 |

**ஆகாயக் காட்சி:**—இம்மாதத்தில் நேரும் சமாகங்கள் காட்சிக்கு அப்பாற்பட்டவை.

**பிரவேஸங்கள்:**—25உ பகல் மணி 2-05க்கு **புதன்** தனுஸிலிருந்து மகரத்திற்கும், 9உ பகல் மணி 2-33க்கு **சுக்ரன்** விருச்சிக மிருந்து தனுஸிற்கும் பிரவேஸிக்கின்றன.

1உ புதன் கிழக்கில் வக்ரோதயம்; 7உ புதன் வக்ரத்யாகம்.

* அயனம்சம் பா-22 கலை-56 விகலை 36·6983 கூட்ட **சாயன ஸ்புடம்** வரும்.

† ஆறு ராசி அல்லது பாகை 180 கூட்ட **கேது ஸ்புடம்**வரும்.

# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்.

சுபாநு௵ தைமீ கலியுகாதி 5045, சாலிவாகனம் 1866
பசலி 1353, கொல்லமாண்டு 1119, ஹிஜிரா 1363
இங்கிலீஷ் 1944௵ ஜனவரிமீ—1944௵ பிப்ரவரிமீ

| தைமீ | ஜனவரிமீ | வாரம். | திதி. | நக்ஷத்ரம் | யோகம். | விசேஷங்கள் |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | வெள் | சது40-47 | மக16-10 | ம16-10சி | மகர ரவி நா-17, வி.46- சங்கராந்தி பண்டிகை |
| 2 | 15 | சனி | பஞ்45-35 | பூர22-13 | சி22-13ம | மாட்டுப் பொங்கல், கரிநாள் |
| 3 | 16 | ஞா | சஷ்49-46 | உத்27-40 | அமி60 | கரிநாள் |
| 4 | 17 | திங் | சப்53-23 | அ32-25 | சி32-25பி | நரஹரி தீர்த்த புண்ய தினம் |
| 5 | 18 | செவ் | அ55-48 | சித்36-37 | சித்60 | அஷ்டக சிரார்த்தம் |
| 6 | 19 | புத | நவ57-05 | சு39-03 | சித்60 | ஆராய்ச்சி வேலைகள் |
| 7 | 20 | வியா | தச55-41 | வி40-13 | சித்60 | விவாகாதி சுபகரங்கள் |
| 8 | 21 | வெள் | ஏ53-56 | அ40-8 | சி40-13ம | ஷடில ஏகாதசி |
| 9 | 22 | சனி | து51-04 | கே38-55 | சித்60 | மருந்து செய்ய |
| 10 | 23 | ஞா | திர47-25 | மூல37-13 | அ37-13சி | பிரதோஷம் |
| 11 | 24 | திங் | சசி42-07 | பூர34-47 | மர60 | மாஸ சிவராத்திரி |
| 12 | 25 | செவ் | ●37-48 | உத்31-10 | பி31-10சி | அமாவாஸ்யை விரதம் |
| 13 | 26 | புத | பிர32-23 | திரு27-13 | சி27-13பி | |
| 14 | 27 | வியா | துதி26-27 | அ22-47 | சி22-47ம | |
| 15 | 28 | வெள் | திரு20-25 | சத18-40 | சித்60 | |
| 16 | 29 | சனி | சது14-37 | பூ15-11 | ம15-11சி | |
| 17 | 30 | ஞா | பஞ்9-33 | உட்11-25 | அமி60 | |
| 18 | 31 | திங் | சஷ்4-50 | ரே8-23 | சித்60 | |
| 19 | 1944௵ பிப்ரவரிமீ 1 | செவ் | சப்1-12 அ58-09 | அசு6-03 | சித்60 | |
| 20 | 2 | புத | நவ56-23 | ப✻4-13 | சி4-13ம | கிருத்திகை விரதம் |
| 21 | 3 | வியா | தச55-10 | கிரு4-47 | மர60 | மந்திரம்-ஜெபம் முதலியன |
| 22 | 4 | வெள் | ஏ55-47 | ரோ5-23 | ம5-23சி | பீஷ்ம பஞ்சகம்-ஜய ஏகாதசி |
| 23 | 5 | சனி | துவ57-35 | மிரு10-25 | சித்60 | பீஷ்ம-வராஹ துவாதசி |
| 24 | 6 | ஞா | திர60-00 | திரு10-51 | சித்60 | பிரதோஷம், வராஹ கல்பாதி, திருதினஸ்பிருக் |
| 25 | 7 | திங் | திர0-30 | புன15-37 | அ15-37சி | விவாகாதி சுபகரங்கள் |
| 26 | 8 | செவ் | சசி4-47 | பூச21-36 | சித்60 | பௌர்ணமி, தைப்பூசம் |
| 27 | 9 | புத | ப○9-35 | ஆ27-35 | சித்60 | ஆகாமாவை |
| 28 | 10 | வியா | பிர14-57 | மக34-13 | அ34-13சி | மாக பகுளம் |
| 29 | 11 | வெள் | துதி19-48 | பூர40-17 | சித்60 | ஆராய்ச்சி அம்சங்கள் |
| 30 | 12 | சனி | திரு24-40 | உத்46-10 | மர60 | கும்ப ரவி நா-45, வி-01 |

| | | | |
|---|---|---|---|
| | | சனி செவ் | |
| | 7-வ-தி-புத<br>9-தனு-சுக் | | ராகு |
| சூரி கே | 23-கட-வ-கு<br>25-மக-பு | | குரு |
| புத | சுக் | | |

**Edited, Printed & Published by N. Munisawmy Mudaliar,**
**At The " Ananda Bodhini " Press,**
**No. 6, Lawyer Chinnathambi Mudali Street, Madras.**

# மதன கோலாகல தங்கமாத்திரை

இம்மருந்து தாதுபுஷ்டியைத் தருவதில் நிகரற்றது. இதில் கஞ்சா அபின் முதலிய லாகிரி வஸ்துக்கள் சிறிதும் சேர்க்கப்படவில்லை. வயது முதிர்ந்த காரணத்தாலும், உலக இச்சை இல்லாதவர்களும் இழந்த பலத்தை



இம்மருந்து ஆச்சரியப்படத்தக்க விதமாக உண்டாக்கி ஒரு விதமான சுறுசுறுப்பையும் கொடுக்கும். இதுவன்றி வேறு எந்த நோயினு லுண்டான பலவீனமும் இம்மருந்தினுல் நீங்கும். இரத்த விருத்தியை யுண்டாக்கி நரம்புகளுக்கு உறுதியைக் கொடுக்கும் தன்மையில் இது கைகண்ட மருந்து. வயோதிகமே தெரியாது. களைப்பும் தோன்ருது. சோர்வையும் சோம்பலையும் நீக்கித் தேக பலத்தைக் கொடுக்கும்.

இது, தங்கம், வெள்ளி, முத்து, அயம், காந்தம் முதலிய உயர்ந்த உலோகச் சரக்குகளும், சஞ்சீவிக்கு நிகரான பல மூலிகைகளும் சேர்க்கப்பட்டு சிறந்த கைபாக செய்பாகங்களாய் தயாரிக்கப்பட்டது.

இதனை ஒரு முறை வாங்கி உபயோகித்தால் இதன் மேலான குணம் தானே தெரியும். 20-மாத்திரைகொண்ட சீசா 1-க்கு விலை ரூபா 2.

# சர்வபடை சம்மாரன்



சரீரத்தின் இடுக்கான இடங்களாகிய துடையின் இடுக்கு, அக்குள், இடுப்பு முதலிய இடங்களில் சிறிது சிறிதாகப் படர்ந்து இரவில் ஓயாத நமைச்சலைத் தந்து நித்திரையைப் பங்கப்படுத்திச் சரீரத்துக்கு அதிக கஷ்டத்தை உண்டுபண்ணும் படைகள், ஒரே தடவையில் இந்தச் சர்வபடை சம்மாரன் என்னும் தைலத்தை உபயோகித்த மாத்திரத்தில் சூரியனைக்கண்ட பனிபோல் நீங்கும்.

புட்டி 1-க்கு விலை அணு 4. தபாற்கூலி வேறு.



# கண்நோய் மருந்து

இது கண்நோய், கண்குத்தல், கூசல், நீர் வடிதல், மங்கல், அந்திமாலை, பீளை கட்டல். சதை வளர்ந்திருத்தல், கண் சிவப்பு, எரிச்சல், கண் இமை புருவம் இவைகளில் வலி, கண் புகைச்சல் இவைகளைக் குணப்படுத்தும். மாணுக்கர்களுக்கும் ஆழ்ந்த பார்வையோடு வேலை செய்பவர்களுக்கும் இது மிகச் சிறந்த ஔஷதம். இதை உபயோகிப்பவர் கண்ணுடி போடவேண்டியதில்லை.

புட்டி 1-க்கு அணு 10. தபாற்கூலி வேறு.

---

தனலட்சுமி கம்பெனி, நெ. 6, லாயர் சின்னதம்பிமுதலி தெரு, மதராஸ்.

# புத்திர சந்தான எண்ணெய்



ஆண்மலடு சொன்னாலும் சொல்லலாகும்
அப்பனே பெண்மலடு யாரு மில்லை
ஏன்மலடாய்ப் போவதென்று கேட்பா யாகில்
இயம்புவேன் கருக்குழியில் சோரிசேர்ந்தால்
ஊன்மிருந்தால் புழுகரிந்தால் உதிரங் கெட்டா
ஓங்கார பிரணவத்தில் வாயு சேர்ந்தால் [ல்
தான்மதத்து விபரீதச் சேர்க்கை செய்தால்
தலையாட்டுப் பேய்பிணியால் தரியாதென்னே

ஸ்திரீகளின் கருக்குழியினிடத்தில் புழுக்கள் உண்டாகி அவ்வப்போது வித்தைப் புசித்துவிடுவதனாலும், விபரீதச் சேர்க்கையாலும், கருக்குழியினிடத்தில் சதை வளர்ந்து சோறி பற்றி இரத்தங் கட்டியிருப்பதாலும், கருக்குழி மதத்துக் கொழுத்திருப்பதாலும், மூலச் சுழியில் வாயு பித்தம் தங்கியிருப்பதனாலும் கரு தரிக்காது.

இந்த எண்ணெயைக் காலை மாலை இருவேளையும் 1 அல்லது 2 காசு அளவு உள்ளங்கையில் விட்டுச் சாப்பிடவேண்டியது. இப்படி 15-நாள் சாப்பிட்டால் இது கருக்குழியிலிருக்கும் ஷை குற்றங்களை நீக்கி, கருக்குழியைச் சுத்தப்படுத்தி, மறு மாதத்திலேயே கரு தரிக்கும்படி செய்யும். இது அனுபவமான எண்ணெய். இதற்குக் கடுமையான பத்தியம் கிடையாது.

சிலருக்கு கருதரித்து 2, 3, 4-மாதங்கள் வரையில் தங்கியிருந்து திடீரென்று உடைந்துபோவதுண்டு. இவ்வகைத் தோஷமும் இந்த எண்ணெயில் நிவர்த்தியாகித் தீர்க்காயுளான கரு தரிக்கும். இதன் விலை ரூபா 2.



# சீதபேதி (டிசென்டரி) பவுடர்

இரத்தபேதி, சீதபேதி, சீதமும் இரத்தமும் கலந்த பேதி, மலத்துடன் இரத்தம் வருதல், மூலக் கடுப்பு அடி வயிற்று நோய் முதலான வியாதிகள் குழந்தைகள் முதல் பெரியோர் வரையில் யாருக்கிருந்தாலும் 4-வேளையில் இது அவற்றைத் தப்பாமல் தடுக்கும்.

ஒரு புட்டியின் விலை அணா 8.

# குழந்தை கக்கிருமல் நிவாரணி

இம்மருந்து கக்குவானால் கஷ்டப்படும் பிள்ளைகளுக்கு ஓர் ரக்ஷிணி. இது வெகு நேர்த்தியாகவும், சுகமாகவும், குழந்தைகள் சாப்பிடுவதற்கு இனிப்பாக இருக்கும். இரண்டு மூன்று நாட்களில் கக்கிருமல் நேரம் பொறுத்து கொஞ்சம் கொஞ்சமாக வந்து சில நாளைக்குள் பூர்த்தியாக குணத்தைத் தரும். இதை உபயோகிக்கும் விதம் மருந்துடன் அனுப்பப்படும்.

புட்டி 1-க்கு விலை ரூபா 1—4—0- தபால் செலவு பிரத்தியேகம்.

---

**விலாசம்:-தனலட்சுமி கம்பெனி, தபால் பெட்டி நெ. 167, மதராஸ்**

# நூதன தமிழ் நாவல்களும் கதைப் புத்தகங்களும்

**ஆரணி-குப்புசாமி முதலியார் இயற்றியவை**

| | ரூ. | அ. |
|---|---|---|
| ஞானசெல்வாம்பாள் 5-பாகம் | 9 | 10 |
| கற்பகச் சோலையின் அற்புதக் கொலை | 1 | 4 |
| கடற்கொள்ளைக்காரன் 2 பாகம் | 3 | 4 |
| மதனாம்பாள் 2-பாகம் | 3 | 0 |
| லோகநாயகி | 1 | 0 |
| விளையாட்டுச் சாமான் | 1 | 6 |
| பவளத்தீவு 2-பாகங்கள் | 3 | 0 |
| தபால்கொள்ளைக்காரர்கள் | 0 | 14 |
| அமராவதி 2-பாகங்கள் | 4 | 0 |
| மஞ்சள் அறையின் மர்மம் | 1 | 8 |
| கற்கோட்டை | 2 | 0 |
| பூங்கோதை | 0 | 10 |
| வீரநாதன் | 0 | 12 |
| கனகபூஷணம் 2-பாகமும் | 3 | 8 |
| கமலசேகரன் | 1 | 12 |
| தினகரசுந்தரி | 1 | 0 |
| ரத்தினபுரிரகசியம் 9-பாகமும் | 18 | 2 |
| சந்திராபாய் | 2 | 0 |
| இராஜாமணி | 2 | 0 |
| இரத்தினாபாய் | 1 | 12 |
| மதனபூஷணம் | 1 | 0 |
| சுவர்ணாம்பாள் | 0 | 12 |
| தேவசுந்தரி | 1 | 4 |
| குணசுந்தரன் | 0 | 12 |
| பத்மாஸனி | 0 | 14 |
| ஆனந்தஸிங் | 2 | 0 |
| மின்சார மாயவன் | 1 | 8 |
| ஆனந்தசிங்கின் அஷ்டஜயங்கள் | 1 | 12 |
| அரசூர் இலக்ஷ்மணன் | 2 | 0 |
| கைவல்லிய நவநீத வசனம் | 1 | 8 |
| சகோதரவாஞ்சை | 0 | 7 |

---

| | ரூ. | அ. |
|---|---|---|
| தத்வசங்க்ரஹ ராமாயணம் | 4 | 0 |
| ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சருடைய சரித்திரமும் உபதேசங்களும் | 1 | 12 |
| விவேகானந்தர் | 4 | 0 |
| தமிழ் மெடீரியா மெடிகா | 3 | 0 |
| மாதவி மாதவன் 2-பாகம் | 2 | 0 |
| மலையாள பகவதி | 1 | 0 |
| அற்புத நவநீத ரம்பை | 1 | 0 |
| அகட விகட விலாச விநோதம் | 0 | 10 |
| சீமாட்டி கார்த்தியாயினி | 0 | 12 |

| | ரூ. | அ. |
|---|---|---|
| துயராளன் கதை | 0 | 12 |
| பூலோக லக்ஷ்மி கதை | 0 | 10 |
| கனகரத்தினம் | 0 | 8 |
| கண்டிராஜா நாடகம் | 0 | 12 |
| நளின சுந்தரி | 0 | 10 |
| கம்பராமாயணவசனசங்கிரகம் | 2 | 0 |
| குசேலோபாக்கியான வசனம் | 1 | 0 |
| ஸ்ரீபாலன் | 0 | 8 |
| உதயணன் | 0 | 7 |
| தசக்கிரீவன் | 0 | 14 |
| போஜ சரித்திரம் | 0 | 5 |
| சதானந்தர் | 1 | 4 |
| ஜீவகன் வசனம் | 1 | 0 |
| கர்ணன் சரிதை | 0 | 12 |
| பீஷ்ம விஜயம் | 0 | 10 |
| கீர்த்திசிங்கன் | 0 | 8 |
| முப்பெருந்தாசர் | 0 | 10 |
| அரிச்சந்திரன் சரிதை | 0 | 8 |
| நீலக்கொடி | 0 | 5 |
| மணவாளன் | 0 | 3 |
| பரசுராமன் | 0 | 3 |
| சிசுபாலன் | 0 | 8 |
| அங்கதன் | 0 | 4 |
| தசாவதாரம் | 0 | 6 |
| கிருஷ்ணன் தூது வசனம் | 0 | 8 |
| சண்டோபாக்யானம் | 0 | 6 |
| கருணாகரரும் சத்தியசீலரும் | 0 | 8 |
| சத்தியவசனி | 0 | 4 |
| விமலன் | 0 | 4 |
| கண்ணபிரான் | 0 | 4 |
| செய்யுட்பாடத்திரட்டு | 0 | 4 |
| நாலுமந்திரி கதை | 0 | 4 |
| மங்களேசுவரன் | 0 | 6 |
| தக்கன் | 0 | 6 |
| சீமந்தனி | 0 | 8 |
| நான்குகோடி | 0 | 4 |
| மதிமோசவிளக்கம் | 1 | 0 |
| மெய்க்காதலி | 0 | 8 |
| மேனாமினுக்கி கதை | 0 | 8 |
| வீணாகானன் ஞானேந்திரி | 0 | 8 |
| மனோன்மணி கதை | 0 | 8 |
| கோமளவல்லி கதை | 0 | 8 |
| விகடவல்லி கதை | 0 | 6 |
| தாலிகட்ட மறந்த கதை | 0 | 5 |

**இந்திர கவசமென்னும் சர்வ தேவதா வசியம்**

முதல் பாகமும் இரண்டாம் பாகமும் சேர்ந்தது. **விலை ரூபா 1.**

---

**ஆனந்தபோதினி ஆபீஸ், தபால் பெட்டி நெ. 167, மதராஸ்.**

# "பொங்கலோ பொங்கல்!"

என்று

மகிழ்ச்சி பொங்க

முழக்கஞ் செய்யும் பொங்கல் திருநாளை முன்னிட்டு

# பிரசண்ட விகடன்

# பொங்கல் மலர்

## வெளி வந்திருக்கிறது

இதில்,

தமிழ்ப்பேரறிஞர்களான டி. கே. சி., ராவ்சாகிப் வையாபுரி பிள்ளை, பி. ஸ்ரீ. ஆச்சாரியா, பெ. நா. அப்புஸ்வாமி, பாஸ்கர தொண்டமான், கி. பக்ஷிராஜன், பி.ஏ., பி.எல்., முத்துசிவன், எம்.ஏ., முதலியோரின் இலக்கியக் கட்டுரைகளும் 'ஜீவா' பி. கோதண்டராமன், பி.ஏ., பி.எல்., வல்லிக்கண்ணன், கா. ஸ்ரீ. ஸ்ரீ., ஆர் திருஞானசம்பந்தம் முதலியோரின் சிறு கதைகளும், ராவ்பகதூர் சம்பந்த முதலியார், டி. கே. சண்முகம், எம். என். எம். பாவலர், ஏ. எஸ். ஏ. ஸ்வாமி ஆகியோரின் நாடகக் கட்டுரைகளும், கவிஞர்மணி தேசிக விநாயகம் பிள்ளை, பாரதி தாசன், நாமக்கல் ராமலிங்கம் பிள்ளை, சுத்தானந்த பாரதி, பி. ஆர். ராஜசூடாமணி, 'நாணல்', 'குவளை' முதலியோரின் கவிதைகளும் சகோதரி ஆர். எஸ். சுப்புலக்ஷ்மி, பி.ஏ., எல்.டி., தங்கம்மா பாரதி ஆகியோரின் அரிய வியாசங்களும், பிரபல சினிமா நடிகர் ரஞ்சனின் நடனக் கட்டுரையும், சம்பந்தமூர்த்தி ஆச்சாரியாரின் தமிழ் இசைக் கட்டுரையும், மலர்ந்து கலை மணம் வீசுகிறது. சூரிய நாராயணனைச் சித்தரிக்கும் மூவர்ண மேலட்டையுடன் சிறந்த சைத்ரீகர்களின் சித்திரங்களும், மகாத்மா, ராஜாஜி, டி. கே. சி., எம். எஸ். சுப்புலக்ஷ்மி மற்றும் சங்கீத வித்வான்கள் படங்களும் இம்மலரை அலங்கரிக்கின்றன. நாட்டிய கலா ராணியின் அபிநய சித்திரங்கள் இம்மலரில் தனி சோபையுடன் விளங்குகின்றன.

### தனிப் பிரதி விலை ரூபா இரண்டு.

(தபாற் செலவு வேறு.)

எல்லா 'பிரசண்ட விகடன்' ஏஜண்டுகளிடமும், 'சுதேசமித்திரன் ஹெக்கின்பாதம் புக் ஸ்டாலிலும் கிடைக்கும்.

### "பிரசண்டவிகடன்" காரியாலயம்,

நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, :: :: ஜி. டி. சென்னை

Edited, Printed and Published by N. MUNISAMI MUDALIAR, at the "ANANDA BODHINI PRESS," No. 6, Lawyer Chinnathambi Mudali Street, Sowcarpet, Madras.